| மகாத்மாக்களும் மனிதர்களும் | |
|---|---|
| 1 | அப்துல் கலாம் |
| 2 | அஸ்தமனம்-மகாத்மாவின் மரணம் |
| 3 | சுப்பரமணிய பாரதி |
| 4 | சேகுவேரா |
| 5 | உயிர்த்த ஞாயிறு-குண்டு வெடிப்பு |
| 6 | இழப்பும் உயிர்ப்பும் |
| 7 | வண பிதா. மாக்ஸ்மிலன் கோபே |
| 8 | வண பிதா ரொட்றிகோ |
| 9 | கலைஞர் மு கருணாநிதி |
| 10 | மகாத்மா காந்தி |
| 11 | மேரி கொல்வின் கீதை |
| 12 | மேரி கொல்வின் நற்செய்தி |
| 13 | மாதுலுவாவ சோபித தேரர் |
| 14 | மைக்கல் ஆஞ்சலோ |
| 15 | அன்னை தெரேஸா |
| 16 | ஓ என் பாரதத் தாயே |
| 17 | தந்தை பெரியார் |
| 18 | சத்தியகிரகி |
| 19 | சோக்கிரடிஸின் மரணம் |
| 20 | சோக்கரடிஸின் இறுதிச் சொற்பொழிவு |
| 21 | திருவள்ளுவர் |
| 22 | தொலைந்த முத்தாரம் |
| 23 | வெள்ளையனும் கறுப்பு வேதமும் |

# சலாம் அலேக்கும் –ஐயா
## அப்துல் கலாம் அவர்களே

---






ஓ மாமேதைகளே! அணு விஞ்ஞானிகளே,
உங்கள் அசுர யாகங்களில்- அரக்க அவதாரங்களாய்
அணுகுண்டுகளும், ஏவுகணைகளும்-இவை
அதர்மத்தை அழித்து -தர்மத்தை நிலைநாட்டிடும்
இறை அவதாரங்களாயிருந்திருந்தால்
உலகம் மகிழ்ந்திருக்கும்.

இவை ஆயுதப் போட்டியின் கோர விகாரங்கள்-இந்தியாவை
இராணுவ வல்லரசாக்கிடும் புதிய யதார்த்தங்கள்.

பொன்மானைத் தேடிடும் ஶ்ரீராமனின் அவலமாய்
சீன –பாகிஸ்தானிய-ஆயுதப் போட்டியில்
இந்தியா சிக்குண்ட மாயம்
தன்னைக் காத்திட இந்திய வகுத்த வியூகம்?
காக்கும் கவசமாய் “சமாதானத்திற்கு”
இந்தியாவின்“அணுவாயுதம்” ?







செத்த கோள்களைத் தட்டிப் பார்க்கச்
செலவிட்ட நேரத்தில் ஒரு பகுதியை-ஏழைகளின்
நல்வாழ்விற்காய் நீங்கள் ஆய்வு செய்திருந்தால்
கனவின்றிக் காரிருளில் தூங்கிக்கிடக்கும்
தாழ்த்தப்பட்ட சமூகமும் கனவு காண விழித்திருக்கும்
புதிய செய்மதிகளும் -அண்டவெளியில்
“சலாம்” சொல்லி ஆனந்தமாய்ப் பறந்திருக்கும்

உங்கள் ஆய்வில் கடல் நீர் நன்நீராகியிருந்தால்
காவிரி –முல்லைப் பெரியார் பிரச்சினை தீர்ந்திருக்கும்-
நாட்டில் இன ஒற்றுமை உயர்ந்திருக்கும்.




“அக்கினி-பிருத்துவி-அணுகுண்டு” என விரிந்த கனவுகள்
மருத்துவ-விவசாய துறைகளுக்கும் பரவியிருந்தால்-
உயிர் காத்து பசிப்பிணி தீர வழிபிறந்திருக்கும்
நதிகள் இணைந்திருந்தால் நாட்டில் விவசாயிகளின்
தற்கொலைகள் மறைந்திருக்கும்

அக்கினிச் சிறகுகளை விரித்து அண்டம் அதிர
“அக்கினியும்” “ பிருத்வியும்” பறந்தபோது
அப்பாவி மனங்களில் பரவசமும் பயமும்
தேசப்பிரியர்களின் இதயங்களிலோ “பிரகலாதனே”
நரசிம்ம அவதாரம் எடுத்த விகாரமும் துயரமும்.

உங்கள் கனவுகளில் "சமாதானம்" மலர்ந்திருந்தால்
அகிம்சை நிலைத்திருக்கும் "மைத்திரேய புத்தர்"
அவதரிக்கக் காலம் கனிந்திருக்கும்




நித்தமும் "சலாம் அலேக்கும்" சொல்லி
கனவு கண்ட "கலாம் ஐயா" அவர்களே-உங்கள்
கனவில் "சலாம்" அணுகுண்டாய் ஆனதும் ஏனோ?
அணுவைப் பிளந்த நீங்கள் பிரிவினையால் பிளவுண்ட
இந்திய- பாகிஸ்தான் ஒற்றுமைக்கு சொல்லிய "சலாம்" இதுதானே?

செய்மதிகளைப் பறக்கவிட்ட மலட்டு ஆய்வுகூடங்களால்
"ஒரு சமாதானப் புறாவையும் பறக்கவிட முயலவில்லை?
தீண்டாமை, சாதிவெறி தீர்க்க-
ஒரு சமன்பாட்டைத் தானும் உருவாக்க இயலவில்லை




ஹிட்லர்--செங்கிஸ்கான், ஸ்டாலின்
என கொடிய அரக்கர்களை மீண்டும் உயிர்பிக்கும்
அசுர குருக்களாய் இருப்பதை விட-இறைமகனாய்
சிலுவையில் அறையப்படுவது மேலன்றோ?

உங்கள் ஆய்வு கூட அக்கினியில்
ஒளிரும் சூரியனைப் பிறப்பிக்காமல்
உயிர் அழிக்கும் அணுவாயுதங்களை
ஏன் உயிர்ப்பிக்கின்றீர்கள்?




இந்திய சாம்ராஜ்யக் கனவின்
புதிய "சாணக்கியர்களில்" நீங்களும் ஒருவரா?
இல்லை தேவ அசுர யத்தத்தில்
"பிரகஸ்பதியா-"சுக்கிரனா" நீங்கள்.?

பயங்கரவாதம்- சாதி,-இன, மதவெறி-
போதைப்பொருள், சிறுவர் துஷ்பிரயோகம்
எனச் சீரழிந்து தவிக்கும் உலகில்-இன்னும்
எதற்கு பேரழிவு ஆயுதங்கள்




அவதார புருஷர்கள் தோன்றிய மண்ணில்
வேதங்களும், உபநிடதங்களும்-தம்மபதமும்-
பகவத்கீதையும், திருக்குறளும் பிறந்த மண்ணில்
பேரழிவாயுதங்கள் தேவையா-? அணுவாயுதம்
சமாதானத்தின் கீதையா? பாதையா?

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினாலேயே தணிக்க முடியும்
இதுவே தொன்று தொட்டு வருகிற தர்மம்
ஏஸ தம்மோ ஸனந்தனோ-

மதங்கள் சாரமற்ற உப்பாகிட, யுத்தம், பயங்கரவாதம் உலகை ஆள
நாளும் அழிவுறும் மானுடம் அணுவாயுதங்களால் குணம் பெறுமோ?
பிதாமகரான மகாத்மாவையும் விழ்த்தியும் தீராத- இனவெறி
மதவெறி அணு ஆயுதங்களால் தீருமோ?




யுத்தத்தில் மன்னன் அசோகருக்கு கிடைத்த ஞானம்
ஐவேளை தொழுத அணு விஞ்ஞானிக்கு எட்டாக் கனியானது
***விலக்கப்பட்ட கனியை*** விரும்பி உண்ட ஆதாமின் கதையானது
"***இன்றியமையாத் தீமை*** அணுவாயுதம்" பாதுகாப்புக் கவசமானது?

முன்னை இட்ட தீ முப்புரத்திலே
அமெரிக்கா இட்ட தீ ஜப்பான் தேசத்திலே
உலகை எரித்திட-அசுரர் மூட்டும் அணுவாயுதத் தீ
யாக குண்டத்திலே-அணைக அணைகவே-ஓயாத
பிரார்த்தனை சமாதானப் பிரியர் மனங்களிலே




ஹிரொஷிமாவும்-நாகசாகியும் கற்றுத் தந்த பாடம்
பழங்கதையானது -அணுவாயுதப் போட்டியில்
நெருப்போடு விளையாடும் விட்டில்கள்-தேவையா
சுட்ட பின் தோன்றும் சுடலை ஞானம்?

இளைஞர்களை கனவு காண தூண்டிய
இன்பக் கனவே-சடுதியாயக் கலைந்து
விண்வெளியில் புது வெள்ளியாய் நிலைத்திட
கனவு கலைந்த துயரத்தோடு கலங்கி நின்ற இந்தியா.

சமாதானப்புறா இளைப்பாறிட இன்றும் இடந்தேடும் அவலம்
இளைஞர்களே அமைதிப் புறா இளைப்பாறிட
உங்கள் இதயங்களில் இடம் தாருங்கள்
சமாதானப் பூங்காவாய் உலகு உருமாறிட-அணு
ஆயுதமில்லாப் புது உலகு உருவாகிட-அன்பு,
உண்மை, சகோதரத்துவம் நிலைத்திடக் கனவு காணுங்கள்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்-உலகில்
நல் மனத்தவருக்கு அமைதியும்-மாறாத கீதை
உயிர் கொல்லும் அணுவாயுதமோ குருஷேத்திரப் பாதை-

***மாமேதை அல்பர்ட் ஐன்ஸ்டினோ மனித நேயத்தின் உருவம்***
அக்கினி இறக்கையிலிருந்து உதிர்ந்த சிறகு
எழுதிய 'அக்கினி காவியமோ" ***அமைதி தேடும் உலகில்***
பாலை நிலம்- அணுவாயுத யுகத்தின் அசுர யாகம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra - 5.4.2023*

# அகிம்சையின் அஸ்தமனம்

---

30.01.1948 **இந்திய சுதந்திர தினம்.**





At the stroke of the midnight hour,
while the world sleeps, India will awake
to life and freedom-*Jawaharlal Neru*

இந்து , முஸ்லீம் பிரிவினை வாதம், அகண்ட பாரதத்தை
இந்தியா, பாகிஸ்தான் எனப் பிளவுபடுத்திட-வெடித்த
இந்து முஸ்லீம் இனக்கலவரம், கொலை, கொள்ளை,
கற்பழிப்பு, தீவைப்பு என தேசத்தை அச்சுறுத்திய அராஜகம்

கோடிக்கணக்கான மானுடம் வேர்விட்ட இடம் பிரிந்து
அகதிகளாய் மாறிட, பல இலட்சம் பரிதாபமாய் உயிரிழந்திட
கீதையும், குரானும் ஓதி குல்லாவும், காவியும் சிந்திய குருதியால்
கங்கையும், சிந்துவும் சிவந்து நாறிட-தேசமெங்கும்
தொற்று நோயாய் பரவிய கொடிய வன்முறை

அகதி, அநாதை, அங்கவீனர், விதவைகளாய் மானுடம்
பாலியல் வன்முறைப் பலிக்கடாக்களாய் பெண் இனம்
வன்முறையின் அகோரம், தீராத பகைமை,
கொடுந்தீயாய் சுதந்திர தேசத்தை எரித்திட்ட நேரம்



சுதந்திர பாரதத்தில் நீதி சிறையிருக்க
மதவாத வன்முறை சுதந்திரம் கொண்டாட
கங்கை கரையில் ஓதிய நான்கு வேதங்களும்-மசூதிகளில்
ஓதிய குரானும், ஐவேளை தொழுகைகளும் பொய்யானது

கீதையும், அல்குரானும் சாரமிழந்திட-கலங்கிய
அகிம்சையின் அவதாரம்-ஹே ராம், ஹே ராம் என்றே
இறைவனை வேண்டிப் புலம்பியது.

இன மத ஒற்றுமைக்காய், நாளும் பிர்லா மாளிகையில்-
மகாத்மா நடத்தும் சர்வமதப் பிரார்த்தனை
ஒற்றுமைக்கான புதிய யாத்திரை

**ஆகஸ்ட் 15, 1947**-மாலை நேரம் 5.00
தேசத்தை எரிக்கும் மதவாதத் தீ இதயத்தை சுட்டெரிக்க
பாரச்சிலுவையாய் இமயச் சோகத்தை இதயம் சுமக்க
கல்வாரிப் பாதையில் தள்ளாடும் மகாத்மா

இதுதான் வேண்டிப் பெற்ற சுதந்திரமா? சாத்வீகம்
சாதித்த விடுதலையா? வரமாய் வந்தது கொடிய சாபமாய்
மாறிட, தீராத பகைமை இனங்களைப் பிரித்திட
ஆறாச் சோகம் மனதை வருத்திட அழுத மனம்

வெள்ளையர் சிந்திய இரத்தத்திலும், பாரத புத்திரர்
சிந்திய நம்மவர் இரத்தம் ஆறாத காயமாய் நெஞ்சை வருத்திட
-இன, மத ஒற்றுமைக்காய் ஏங்கிய உத்தமர் உள்ளம்.

இளமையும், வளமையும் இந்திய சுதந்திரத்திற்கே அர்பணமாகிட
எழுபத்தி எட்டு அகவையை தாண்டிய ஏழை, முதுமையில் தள்ளாட
-மனம் அல்லாட, இளைத்த உடல் களைப்பாறத் தவிக்க சற்றுத்
தாமதமான மாலை நேரப் பிரார்த்தனை



உறவுகள் ***மனுப்பென்னும், அப்ஹாவும்*** ஊன்று கோலாய்
உதவிட, அண்ணலும் அமைதி நாடி பிரார்த்தனை
மண்டபம் நோக்கி மெல்ல நடந்தார்

இறைவனே சத்தியம் எனத் தொடங்கிய தேடல்
சத்தியமே இறைவன், அகிம்சையே பாதை எனத் தெளிந்திட
வாழ்வும் சத்திய சோதனையாகிட, எங்கும் நிறைந்த
பரப்பிரம்மத்தை-இதயம், சாந்தி, சாந்தி என்றே இறைஞ்சிட
அமைதி தேடி நடந்த அகிம்சா புத்திரன்

***இறைவனின் பாதை கோழைகளுக்கல்ல***
***சத்திய புருஷர்களுக்கே- உண்மையின் புரட்சியாளர்க்கே***

சத்திய சோதனையான வாழ்வில், மகாத்மாவிற்கு ஜே! என வாழ்த்திய
கூட்டமும், காந்திக்கு மரணம் என தூஷித்த கூட்டமும்
மலர் மாலை அணிவித்து மகிழ்ந்த நேசமும்
கல் எறிந்து கனலைக் கக்கிய குரோதமும் மாறவில்லை

நாதுராம் விநாயக் கோட்ஸே-இந்துத் தீவிரவாதி
இராஷ்டிய சுயசேவா சங்க உறுப்பினன்
அகண்ட சுதந்திர பாரதத்தை-தன்
இலட்சிய கனவாய் கொண்ட இந்து மதவெறியன்

ஒன்றிணைந்த அகண்ட பாரதம் பிளவுபட- கண்ட
இந்து ராஜ்சியப் பெருங்கனவு கலைந்து, கட்டிய மனக்கோட்டையும்
தரைமட்டமாகிட, கோட்ஸேயும் நண்பர்களும் கூடி,
வெள்ளையர் காத்த அமைதிப்புறாவை சுட்டுச் சாய்த்திட
முடிவு செய்த மதவாதக் கொடுமை






காந்தி முஸ்லீம்களின் நண்பர்-இந்துக்களின் எதிரி-
சத்தியத்தின் ஏக குரல் என்பது பொய், பழித்த நெஞ்சம்
பழிவாங்கத் துடித்தது, திட்டமிட்டே உத்தமர்
உயிர் குடிக்க இரத்த வெறி கொண்டு தவித்தது-

பிரார்த்தனை மண்டபம் நோக்கி-மக்கள்
கூட்டம் நகர்ந்திட, கூட்டத்தோடு கூட்டமாய்
பசுத்தோல் போர்த்திய ஓநாயும் பதுங்கி நடந்து
அண்ணலை அணுகி வணங்கிப் பாதம் பணிந்தது

கூப்பிய கைகளோடு தன்னை பணிந்தவன்
கூற்றுவன் தூதன் என் ஆழ்மனம் எச்சரிக்க
எல்லாம் இறை செயல் என அறிந்தவர்
இரு கரம் கூப்பி பதில் வணக்கம் சொன்னர்

தம் நேரம் வந்ததை அறிந்தவராய்-
அமரத்துவ நிலை அடைய உதவும்
மனிதனை கண்டு புன்னகைத்தார்

பணிந்து பாதம் தொட்டவன் எழுந்திடக்-கொடும் பாவியின்
கைத்துப்பாக்கி குண்டுகளை கக்கிட, கொலை வெறியோடு
பாய்ந்த மூன்று குண்டுகள், உண்ணா நோன்பிருந்து
நொந்த வயிற்றை துளைத்து, அகிம்சையை சாய்த்து
தம் கொலை வெறி ஆற்றி ஓய்வுகொண்டனவோ?

***ஹே ராம்!, ஹே ராம்!***

திருவாய் இறைவனை அழைத்து பிரார்த்தனை முடித்தது
பரிநிர்வாணம் கிடைத்திட-மெய்யும் அப்ஹா மடியில்
மெல்லச் சாய்ந்தது.-அகிம்சையைச் சாய்த்த மதவாதம்
அன்போ தெய்வம் அறியாத இந்துத் திமிர்வாதம்?




“பணியின்போது நான் இறக்கவேண்டும்-இறைவன்
திருநாமம் ஓதி என் இறுதி உயிர் மூச்சும் பிரியவேண்டும்”
வேண்டிய வரம் கிடைத்திட-மகிழ்ந்து
விண்ணகம் போனது உத்தமர் ஆவி

“My only wish is to die in harness,
taking the name of God with my last breath”

நேருவின் பாடலோ சுரம் தப்பிய கானமானது,
இந்தியா, பாகிஸ்தான்ஈ மாறாத பகைமை யதார்தமானது

தடுமாறி வீழ்ந்த மனு எழுந்தபோது, கொன்றவனை
வாழ்த்தி கூப்பிய கைகளோடு, மண்டபத்தை நோக்கி நடக்க
முயன்ற பாபுஜி, மெல்லச் சரிந்து மண்ணில் வீழ்ந்திட
வெள்ளைப் போர்வை நிறம்மாறிச் சிவந்திட
சிதறிய செபமாலை, இரத்தக் கறை படிந்த குறிப்பேடு
புழுதி படிந்த எச்சில் பாத்திரம்-மாலை மணி 5-17

பக்த பிரகலாதனை காத்திட்ட நரசிம்ம அவதாரம்
புராணமாக, அகிம்சையின் அவதாரத்தை அழித்திட்ட
இந்துமதவாதம் சிவப்பு வரலாறானது!



சுற்றிய சத்திய இராட்டினம் நின்றிட
இன மத ஒற்றுமைக்காய் நூற்ற நூலும் அறுந்திட
சத்திய தேடலும் முடிவுக்குவர
சத்திய கிரகியின் ஆத்மா சாந்தி அடைந்ததே?

விழிகளிலே கங்கை பெருக்கெடுக்க, மொழிகளிலே முகாரி
ஆர்ப்பரிக்க, உப்புச் சத்திய கிரகியின் உயிர் குடித்த
மதவாதிகளின் கைகளிளோ-வன்முறையின் சிவப்பு
வெளிறிய காவிகளை சிவப்பாக்கிட-தேசபிதா
ஈந்த குருதியிலோஅகிம்சையின் சிவப்பு

வெளிறிய காவிகளைச் சிவக்கவோ-மதவாதம்
மகாத்மாவின் குருதியை சிந்தியது?
கோர தெய்வங்களின் குருதி விடாய் தணிக்கவோ
அகிம்சையின் அமைதிப்புறாவை வீழ்த்தியது?

சுதந்திரச் சூரியனும் அஸ்தமிக்க-மண்ணிலும்
இரத்தம், மதவாத மனங்களிலும் இரத்தம்
வான்சுடரும் அஸ்தமிக்க விண்ணிலும் இரத்தம்
விடியலின்றி இன்றும் தொடரும் இந்திய, பாகிஸ்தான் யுத்தம்

அகண்ட பாரதத்திற்காய்-அசுவமேத யாகம் செய்த
அவதார புருஷன் ஸ்ரீராமனும், குந்தி புத்திரன் யுதிஷ்டிரனும்
வாழ்ந்த மண்ணில், அடிமைப்பட்ட அகண்ட பாரதத்தை மீட்க
அகிம்சைப் பாதையில் தன்னுயிர் ஈந்த தேவ மைந்தனாய் மகாத்மா

குருஷேத்திர பார்தசாரதி அருளியதோ பகவத்கீதை-
சுதந்திரப் போராளி, சத்தியகிரகி , அரை நிர்வாணப் பக்கிரி
வாழ்ந்து காட்டியதோ அகிம்சையின் கீதை
சத்திய புருஷர்களை கொல்வதோ மதவாதச் சாதனை?



நள்ளிரவில் மலர்ந்த இந்திய சுதந்திரம்
நாளைய விடியலுக்காய்-அகிம்சையின்
தலைமகனை பலி கேட்டதோ? வேதனை

மதவாதம் சிந்திய மகாத்மாவின் இரத்தம்
காயாத தொடர்கதையாக-
இந்து முஸ்லீம்-வன்முறை புகையும் எரிமலையாக
இன்றும் எல்லைளை ஈரமாக்கிட சிந்திடும் இரத்தம்
***ஹே ராம்***




வெள்ளை நெஞ்சங்களைக் கொள்ளை கொண்ட
மகாத்மாவால்-ஜின்னாவின் மனதை மாற்ற முடியவில்லை
இந்து, முஸ்லீம் மதவாதத்தை உண்ணா நோன்பாலும்
சாத்வீகத்தாலும் சத்தியகிரகியால் வெல்ல முடியவில்லை

சத்தியம் தோற்பதில்லை-சத்தியகிரகியின் வாழ்வு
சாத்வீகத்தின் கீதை பொய்யில்லை



***ரகுபதி ராகவ ராஜாராம்-பதித பாவன சீதாராம்***
***ஈஸ்வர அல்லா தேரே நாம்***
***சப்கோ சன்மதி தே பகவான்***

மானுட இதயங்களை அன்பினால் புடமிட்ட
ஆன்மீகக்கிளர்ச்சியாளனைக் கொன்றதோ யூதமதவாதம்
அகிம்சையின் வடிவைச் சிதைத்தோ இந்து மதவாதம்
உலகை அச்சுறுத்துவதோ இஸ்லாமிய மதப்பயங்கரவாதம்
மதங்களில் “இறைவன்” வாழ்கிறான் என்பதோ மாயாவாதம்

இருண்ட மனங்களை புடமிடாத மதங்கள,-தேசங்ளை
அடிமையாக்கி ஆளும் வெள்ளை இனம்-கறுப்பு
அடிமைகளை விற்றுப் பிழைத்த ஈனம்
கிறிஸ்தவத்தை தழுவியும் கிறிஸ்துவாய் மாறாத ஊனம்

பிறந்தவனுக்கு மரணம் நிச்சயம்-இறந்தவன் பிறப்பது உறுதி
பரிகாரம் காணமுடியாத இந்த விஷயத்தில்-அருச்சுனா
-நீ கவலைப்படுவது பொருந்தாது,
பகவத்கீதை-(சாங்கிய யோகம் 27)

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-15-09-2023*

# சுப்பரமணிய பாரதி

---

ஓ முண்டாசுக் கவியே!முத்தமிழ் பெற்றெடுத்த
அக்கினிக்குஞ்சே! கண்கள் சிவந்து, கட்டு மீசை
துடிக்கும்போதெல்லாம் உன் நெஞ்சில் புரட்சியின் கொதிப்பு
நெற்றிக் கண்களிலோஅநீதியை சுட்டெரிக்கும் தகிப்பு





Art by Christy 1

தேச விடுதலைக்காய், வெள்ளையரைச் சாடியபோது
உன் கவிதைகளில்-சத்தியத்தின் உருத்திர தாண்டவங்கள்
சமூக விடுதலைக்காய் "சாதியத்திற்கு" சாவு மணி
அடித்தபோது, "**மனுஸ்மிருதியை**"கவிதை நெம்புகோலால்
புரட்டிப்போட்ட புதிய ஆக்கிமிடிசின் அவதாரங்கள்

பெண் விடுதலைக்காய் ஒலித்த உன் குரல்
தமிழ் நாடு கேட்ட இடியின் நாதம்
தேச விடுதலையோ உன் குருதியில் கலந்த கீதம்

பாரதத் தாயின் அடிமை நிலை கண்டு கொதிக்கும்
நெஞ்சோடு நீ பிறந்தாயோ?
குடித்த தாய்ப் பாலையும் உன் அன்னை
புரட்சித் தீயில் சுடவைத்து தந்தாரோ?

ஓ முண்டாசுக் கவியே! உன் தோற்றமும் புரட்சி
உன் சிந்தனையோ-அடிமை மானுடத்திற்கு
புதுப்பள்ளியெழுச்சி

சாதி மதங்களை கடந்து மனித நேயத்திற்காய்
நீ புரிந்த யுத்தம், புதிய குருக்ஷேத்திரம்,
புதிய கீதையாய் யாத்த-சாதியம்
கடிந்த கவிதைகளோ பிரம்மாஸ்திரம்



வறுமை வாட்டியபோதும்-உன் தமிழ் இரந்து பாடவில்லை-
பொருள் கேட்டு எவரையும் பொய்யாய் புகழ்ந்தும் பாடவில்லை
அக்கிரகாரமே ஆட்டங் காண சாதியம் கடந்த உன் வேனு கானம்
கவிதைகளால் யாத்த வேள்வியோ
அஞ்ஞான இருள் கலைக்கம் ஞான யக்ஞம்

உன் கானமோ தாழ்த்தப்பட்டவர்கள் வாழ்விற்கு
புதிய விடியல் -சமத்துவமும், சகோதரத்துவமும் ஓங்கிட
தேசத்திற்கோ புதிய எழுச்சி, வெள்ளையர்
அடிமை மோகம் ஒழிந்திட புதிய பள்ளியெழுச்சி

தீண்டாதான் மார்பிலும் முப்புரி நூல் போட்டு
புதிய சமூகம் படைத்த பிரம்மனும் நீ
சாதியக் குற்றம் பரிந்த பார்பன சமூகத்தை
நெற்றிக் கண்ணால் வாட்டிய முக்கண்ணனும் நீ

கடமையே வழிபாடு, கடமையே யோகம், கடமையே
வேள்வி, சாதி மதங்களை கடந்த உன்தன் சங்க நாதம்
சத்திய யுத்தத்திற்காய் முழங்கிய பாஞ்சஜன்யம்

நாறிக்கிடந்த சமூகத்தின் மனஅழுக்கை வெளுத்தவனே
உன் புரட்சியால் பூவும் கருகவில்லை, புல்லும் சாகவில்லை
சத்திய நெருப்பாய் ஜொலித்த அகிம்சாவாதி நீ
அக்கிரகாரம் காணாத அதிசயப் பரிணாமம் நீ

காதலையும் சுவைபடப் பாடி-காதலரையும் காமுறவைத்த
வேனுகோபாலன் நீ, அறியாமை இருள் விலகி, அச்சமும்,
அடிமைத்தனமும் நீங்கிட தேசபக்தி ஓங்கிட
கர்ச்சித்த சுதந்திரப் போராளியும் நீ

உன் சிந்தனையிலும் புரட்சி, உன் பாடல்களிலும் எழுச்சி
பாமரனும் கவிதைச் சுவையறிய, அழகு தமிழால்
கவிதை புனைந்த, அற்புதச் சித்தன் நீ




மானுடத்தை கவிதை நெருப்பால் புடமிட்ட
தமிழ் கொல்லனே, அலங்கார இலக்கியங்கள் மத்தியில்
உன் கவிதை வடிவம்-அதர்மத்தை அழிக்க- நீ
எடுத்த நரசிம்ம அவதாரம்?

பாரதி உன் பெயரிலும் தீ -உன் எழுத்திலும் -தீ
பாரதத்தின் புரட்சித்தீ-நீ, புரட்சிப் பாவலன் நீ
வேள்வியாய் கவிதை தீ யாத்த புதிய வேதியன் நீ

கவிதைத் தீயால் நீ மூட்டிய புரட்சி
இந்திய வரலாற்றில் காலத்தால் அழியாத மாட்சி
ஒடுக்கப்பட்ட மானுடத்திற்கு உன் வாழ்வோ
நம்பிக்கை தரும் புதிய எழுச்சி

மகாத்மாவுக்கும், கவி இரவீந்திரநாத் தாகூருக்கும்
உன் ஆளுமையின் பரிமானம் புரிந்திட-கர்வத்தோடு
காச்சித்த வணங்காமுடி நீ,
புதுச்சேரி வெள்ளச் சேதம் கண்டு
புண்பட்டு அன்னையிடம் வேண்டிடப் பிறந்த
கவிதையோ‘‘காணி நிலம் வேண்டும்’’

இராப்பிச்சை எடுத்த தேச பக்தன் பிரமச்சாரி நீலகண்டனின்
வறுமை கேட்டு, கொதித்த நெஞ்சம் குமுறிடப் பிறந்த
பாடலோ, “தனியொருவனுக்கு உணவில்லையெனில்
ஜெகத்தினை அழித்திடுவோம் “

“பராசக்தியின் பக்தனே-அன்னையோ உன் நெஞ்சில்
அனலாய்க் கொதித்திட, சித்தனும் நீ,
அடிமை மனங்களில் புத்தொளி படர்ந்திட
புரட்சிப் பண் பாடிய பித்தனும் நீ



சிங்களத் தீவுனுக்கோர் பாலமமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்
ஈழத் தமிழர் எம்மை மறந்து பாடினாயோ –கவியே
தமிழ் ஈழத்தாயகத்தை மறுத்துப் பாடினாயே?-

உன் புரட்சி நெருப்பு எங்கள் நெஞ்சைப் பற்றிட
நெஞ்சம் துடிக்க, இரத்தம் கொதிக்க, வங்கக்கடலும்,
பாக்கு நீரிணையும் ஒன்றாய்ச் சிவக்க-வேங்கைகளாய்ப்
போராடி வீழ்ந்த மறவர் நாம், பாலமின்றிப் பாதையின்றி-நாதியற்று
பாக்கு நீரிணையில் நாளும் மூழ்கிய அகதிகளும் நாம்

தமிழின் கொடுமுடியில் பூத்த அக்கினிப் பூவே-உனக்கே
சொந்தமான நிமிர்ந்த நெஞ்சும், நேரிய பார்வையும்
கண்டோ-காலதேவனே மரணவாயிலில் உன்னை
கைகூப்பி வரவேற்றுக் கௌரவித்தான்?

புகழுக்கும் வணங்காத தலை-ஏழ்மையிலும்
பொருளுக்காய் குனியாத பொற்சிலை, வளமான வாழ்வும்
கனவாக, வறுமைத் தீ மித்த போராளி வாழியவே

நெஞ்சை நிமிர்த்தி- தமிழன் நான் , பாரதம் என் தாயகம்
என்று சிந்து பாடிய சுதந்திரச் கவிஞன் நீ
***காலமுள்ளவரை–ஓ முண்டாசுக் கவியே தமிழ் உலகம்***
***உன்னை மறவாது உன்னை மறந்தால் தமிழும் வாழாது***

தூங்கிக் கிடந்த அடிமைச் சமூகம் விழித்தெழ-
விடுதலைச் சுப்பிரபாதம் பாடிய சுதந்திரப் பித்தன்
அன்னை பராசக்திப் பக்தன்
சுப்பரமணிய பாரதி-வாழிய வாழியவே

***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra- 28-09-2023*

# சேகுவாராவும், செஞ்சட்டைகளும்





முதலாளித்துவ அடக்கு முறைகளால் முடமாகிப்போன
தொழிலாளர் வாழ்வு -செம்புரட்சியால் மலர்ந்த
பொதுவுடமை அரசின் கனவுகளும் பொய்யாகிட
சிவப்புச் சர்வாதிகாரத்தால் ஜனநாயகத்திற்கோ சாவு

பாட்டாளிவர்க்கத்துக்குப்-பள்ளி எழுச்சி பாடிய
ஆர்ஜென்டினாவின் புள்ளிக்குயில்
பொதுவுடமைச் சமுதாய விடியலுக்காய்
கட்டியம் கூறிய செஞ்சேவல்



கியூபாவின் விடுதலைக்காய் பிடலுன் தோளோடு தோள் நின்று
காட்டிலும், மேட்டிலும் போரிட்ட மனிதநேயப் போராளி
பொலிவிய விடுதலைப் போராட்டத்தில்
தன்னுயிர் ஈந்த தியாகி சேகுவாரா

The revolution is made through human beings, but individuals must forge their revolutionary spirit day by day.

Ernesto Che Guevara

தன் கனவுகளின் யதார்த்தங்களைக் காண
காலம் அவனை விட்டுவைக்கவில்லை
மானுட மனங்களில் புரட்சி விதையை தூவிய
மாமனிதனும் ஏமாந்த அவல நிலை

இன்று அவன் இருந்திருந்தால்-பிடல் காஸ்ட்ரோவும்
வாழ்நாள் சர்வாதிகாரியாய்-மற்றோர் பாஸ்டிஸ்டாவாய்
நிறம் மாறியதற்காய் கொதித்தெழுந்திருப்பான
சர்வாதிகார விகாரங்கள் மறைய
புதிய புரட்சிப்போர் தொடுத்திருப்பான்.




மார்க்ஸிசப் பாதைகளில் எல்லாம் -சிந்திய
மானுட இரத்தத்தின் சிவப்புகள்
கம்யூனிஸ அரியணைகளில் எல்லாம்
சர்வாதிகாரத்தின் கொடும் கசப்புக்கள்

லெனினும் , ஸ்டாலினும் சிந்திய இரத்தத்தை புலம்பிப் பாடிட
சிவப்பு ரஷ்யாவின் கவிஞனுக்கும் அச்சம்,
செஞ்சட்டைகளின் இரத்தவெறியைக் குணமாக்கிட
மார்க்ஸியத்தில் மருந்துக்கும் பஞ்சம்

ஜனநாயத்திலும் மக்களை ஏமாற்றும் ஜனரஞ்சக வஞ்சகம்
கம்யூனிஸத்திலும் உண்மையின் குரல் வளை நெரியுண்ட அராஜகம்

சார் மன்னராட்சியை அழித்த தோழர்களே
சிவப்பு சர்வாதிகாரிகளானார்
லெனினும், ஸ்டாலினும் -பின்னாளில்
முடிசூடா புதிய சார் மன்னர்களானார்.




ஜனநாயக மறுமலர்சியின் புது எழுச்சியாய்
சாத்வீக வழியில் சீன மாணவர் புரட்சி,
டெனமன் சதுக்கமே “செஞ்சதுக்கமாய் ” மாறிட
சிவப்பு சர்வாதிகாரத்தின் அராஜக எழுச்சி




புத்தபிக்குகள் தீக்குளிக்க-தலைலாமாவும்
சீடர்களும் நாட்டை விட்டு தப்பி ஓடிட-
தீபெத்தை ஆக்கிரமித்த சிவப்புச் சீனா

ஒரு சிறையின் இருண்ட கதவை திறந்தவர்களோ
உலகில் பல சிறைகளை அமைத்தார்கள்
சர்வாதிகாரத்தை எதிர்தவர்களே
ஜனநாயகத்தை குழிதோண்டிப் புதைத்தார்கள்




சுத்தியலும், அரிவாளும்
சுதந்திரச் சிந்தனைகளை அடித்து நொறுக்கிட
செங்கொடிகளைச் சிவப்பாக்கிட சொட்டும்
அப்பாவி தொழிளாலர்களின் இரத்தம்

மே தின-மேடைகளிலோ முதலாளித்துவத்தை எதிர்க்கும்
புரட்சித் தோழர்களின் வரட்டுச் சத்தம்-
புரட்சிப் பாதைகளில் புழுதி அடங்கிடச் சிந்தியதும்
மானுட இரத்தம்-புரட்சி நிலைக்க -செஞ்சட்டைத்
தோழர்கள் புரிந்ததும் அராஜக யுத்தம்



பதக்கங்கள் சூடிப் பதவிகளை அலங்கரித்து-
ஆயுதமுனைகளில் நாடாளுமன்றதின் நாவறுத்து,
நாமாள்வோம் என்றே, ஜனநாயகத்திற்கு
சாவுமணி அடித்திட்ட புரட்சித் தலைவர்களால்
மடிந்திட்ட மனித உரிமைகள்
மறைந்திட்ட ஜனநாயகப் பெருமைகள்




கம்யூனிஸத்தின் வாரிசுகள் காலனித்துவப் பிரபுக்களாய் மாறிட,
நீதியின் குரல்களும் குரல்வளை நெரியுண்டு செத்திட
நாம் கனவு கண்ட பொதுவுடமை சமதர்ம சமுதாயம் எங்கே?
என் தோழர்களே சேகுவாரா கேட்கின்றான்

வன்முறையின் பாதையில் விடுதலை இல்லை
தர்மமும், நீதியும் அழிந்திட்ட நிலையில்
ஆபேலின் அழுகுரல் ஓயவில்லை
கம்யூனிஸ ஆட்சியில் காணமல்போன கடவுளும்
மானுட அவலத்தை காண ஏனோ திரும்பி வரவில்லை







தோழர் சேகுவராவின் கல்லறை
தொழிலாளர் புரட்சியின் சின்னமாய் மாறிட
கல்லறையில் கருகி வாடிப்போன மலர்கள்
கயிறறுந்த பட்டமாய் அலையும்
கலைந்த பாட்டாளிகளின் கனவுகள்

தூங்கியதுபோதும்
***ஓ என் தோழர்களே! ஒன்றுபடுங்கள்***
***விழிப்புணர்வு கொள்ளுங்கள்.***

ஆயுதப்போராட்டங்களால் அமைதி இல்லை
அன்பு மதங்களும் காலணித்துவ கைக்கூலியாய்
மாறியது சரித்திரத்தில் மறையவில்லை




குருஷேத்திரத்தில் வாக்கெடுப்பு நடந்திருந்தால்
கௌரவருக்கே வெற்றி-ஜனநாயகம்
கேலிக்கூத்தான யதார்த்தமாக
கீதை சொன்னவனோ சத்தியத்தின் சக்தி

***உண்மையிலும், ஆவியிலும்-இறைவனை***
***வழிபடாத மதங்கள் போலிகளே***
***கிறிஸ்துவை மறுதலிக்கும் கழைக் கூத்தாடிகளே***




அழுகைச் சுவரும், அல் அக்ஸா பள்ளியும்,
இராமர் கோயிலும், பாபர் மசூதியும் மதவாதிகளுக்கே-
மனித நேயப்பித்தனோ மதம் கடந்த சித்தன்
வாழ்ந்தால் இயேசுவாக வாழ்-
சத்தியத்திற்கு சாட்சியாக மடிவாய்
புரட்சிகள் வீரர்களுக்கே-மானுடத்தைப் பிரிக்கும்
மதங்களும், வேதங்களும் கோழைகளுக்கே




வாழ்வு ஒரு முறை- தோழா, சத்தியத்திற்கு சாட்சியம் பகிரு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-14-05-2023

# உயிர்ப்பு ஞாயிறு-21.04.2019





ஈழத்தில் இன்றோர் பேரனர்த்தம்
உலகே நொந்து வருந்திட -ஆலயங்களில்
இஸ்லாமிய மதப்பயங்கரவாதம் நடத்திய
மனிதப் படுகொலைகளின் அகோரம்.

உயிர்ப்பைச் சுவைக்க வந்தவர்களே
அகால மரணத்தின் கசப்பைச் சுவைத்தார்
ஒளியைக் கொண்டாடி மகிழ்ந்தவர்களே
மரண இருளின் பள்ளத்தாக்கில் வீழ்ந்தார்

நீரால் திருமுழுக்கு பெற்றவர்கள்
நெருப்பினாலும், குருதியினாலும்
புது முழுக்குப் பெற்று நீங்காத நினைவானார்
இறைமக்களாய் இயேசுவுக்கு உறவானார்?



மகிழ்ந்து பாடித் தொடங்கிய உயிர்ப்பு விழாவே
ஒப்பாரி, புலம்பலோடு இழவு வீடானது
நிலைவாழ்வு தரும் மத நம்பிக்கையோ
மதப்பயங்கரவாதத்திற்குப் பலியானது?



பயங்கரவாதிகளின் அசுர வேள்விகளில்
ஆலயங்களும், பக்தர்களும்,
உல்லாசப் பயணிகளும் ஆகுதியான அச்சம்
நஞ்சான மனங்களில் இரக்கத்திற்கும் பஞ்சம்





கொச்சிக்கடை புனித அந்தோனியார்,
நீர்கொழும்பு புனித செபஸ்தியார்,
மட்டக்களப்பு சீயோன் ஆலயங்கள்
குண்டுத் தீயில் தகர்ந்திட“குர்பானியாய்”
உயிர்கள் மாறிட்ட அவலம்?

காயீன் சிந்திய ஆபேலின் குருதி-இன்றும்
இறைவனைக் கூவிக் கதறிட
இறையில்லத்தையும் எரிநரகாய் மாற்றிய
மதப்பங்கரவாதம் சாத்தானின் வேதம்?

உயிர்ப்பு ஞாயிறும் பெரிய வெள்ளியாய் மாறிட
உயிர்த்த கிறிஸ்துவின் உடலெங்கும்
மரித்தோர் சிந்திய குருதிக் கோலம்

மொட்டும், பூவும், பிஞ்சும், காயும், கனியுமாய்,
உதிர்ந்தவர் தொகை இருநூற்று ஐம்பத்தி மூன்றாகிட,
அங்கமிழந்தவர், காயமுற்றவர் ஐநூறைத் தொட்டிட,
அழுதும் தீராத சோகம் ஆண்டவனும் தேற்றாத பாவம்,



அழுது புலம்பி ஆறாய்க் கண்ணீர் சிந்தியும்,
துயில் கலையாத உறவுகள்-சொந்தங்களைப்
புதைத்து சோகத்தை மனதில் விதைத்த
நெஞ்சங்களில் தள்ளாடும் இறை நம்பிக்கை

விழிகளில் கண்ணீர் சொரிய-விம்மிடும்
நெஞ்சில் சோக எரிமலை பொங்க
மண்ணில் புதைந்து மறைந்த சொந்தங்கள்
மனதில் வாழ்வே மாயம் என்றான நிலைகள்

மாலையிட்ட படங்களோ சுவரில்-கண்ணீர்
மாலை சூடிய உறவுகளோ மனக்கண்ணில்
மீளாத் துயில் கொண்ட உறவுகள்
நிம்மதியை கலைத்த கொடிய நிகழ்வுகள்

உப்பாரிகையில் உலாவிடும் ஏரோது, பிலாத்துக்கு
கொலை அரசியல் கேளிக்கை
மதவாத அன்னாஸ். கைபாஸீகளுக்கு கொலையும்
“ குர்பானி ” எனும் இறை நம்பிக்கை



ஆண்டுகள் நான்கு போனபின்பும்
நீங்காத சோகம்-நீதி கிட்டாத அவலம்



இன்றும் குற்றவாளிகள் உல்லாசமாய் உலாவிட
தீராத சோகத்தில் உறவுகள் புலம்பிட
ஈழ அரசியலில் மறையாத குருதிக்கறை
நீதி தேவதை நிரந்தர குருடியான அவலநிலை

அப்பாவிகளின் குருதி ஆறாய் ஓடிட
அழுகைச் சுவரும், க.:.பாவும் கல்லான துயரம்
யுத்த நெருப்பில் குளிர்காயும் இறைவன்-யூத, கிறிஸ்தவ,
இஸ்லாமியர்களின் ஏகபோகத் தலைவன்?

குருதியில் “வுழு” செய்து -அப்பாவிகளை
“குர்பானியாய்”நரபலி கொடுத்தவர் ஜிகாதிகளோ?”
ஷலோம் சுரம் தப்பிய நாதமா?
சலாம் அலேக்கும் சாரமற்ற வாழ்த்தோ?

ஒன்பது மனங்கள் மாறியிருந்தால்
கொடிய அனர்த்தம் நேர்ந்திராது-ஈழத்தை
கொடிய அவலம் உலுக்கியிராது.

அளவற்ற அருளாளனே!, நிகரற்ற அன்புடையோனே
வருந்திச் சுமை சுமந்து வாடிக் கூனிய
வலுவற்ற மனிதர் எம்மீது இரங்கும்



மனித சகோதரத்துவம் நிலைக்க
எல்லா மனங்களிலும் உன் அமைதி வாழ
இறைவா எம்மைக் காத்து வழிநடத்தும்

jihad ISLAM
(LESSER JIHAD)
a struggle or fight against the enemies of Islam:
"*he declared a jihad against the infidels*" · "*the importance of jihad as a uniting force*"

(GREATER JIHAD)

the spiritual struggle within oneself against sin.

அமைதி என்பது சூனியம்-ஆணவம் கழித்த
விழிப்புணர்வின் வாழிடம்




தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

ஆன்மீகச் சுதந்திரத்திற்கான-தனிமனித
அகப்போராட்டமே -விழிப்புணர்வுக்கான
சத்தியத் தேடலே-ஜிகாத்

***ஹே அல்லா-இன்ஷா அல்லா***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28-09-2023

*21.04.2019 Easter Sunday-Multiple Bomb Blasts in Sri Lanka*

# இறப்பும், உயிர்ப்பும்

முன்னை இட்ட தீ முப்புரத்திலே-அன்னை இட்ட தீ
அடிவயிற்றிலே-சிங்களம் இட்ட தீ யாழ் நூலகத்திலே
மதவெறியன் சஹ்ரான் இட்ட தீ கிறிஸ்தவ ஆலயங்களிலே
அணையாத சோகத்தீ அன்பு மனங்களிலே

***இது அக்கினித்தேரில்-இறைவாக்கினர் எலீஜாவின்
விண்ணக யாத்திரை அல்ல, குண்டுத் தீயில்
வெந்து. நொந்து மடிந்த சொந்தங்களின்
அகால மரண யாத்திரை***


St.Sebastian Church Negombo



சொந்தங்களைப் காவுகொண்ட சோகத் தீ
பந்தங்களின் நெஞ்சத்தைப் பற்றி எரித்திட
தீ அணைக்க கண்ணீர் சிந்தும் உறவுகள் -மண்ணில்
புதைந்தும் மறவாத சோக நினைவுகள்

என் தேவனே! என் தேவனே! ஏன் எம்மை
கைநெகிழ்ந்தீர் மனம் கேவிட-ஆலயங்களே
கல்வாரியான அவலம், அன்பு மனங்கள்
அன்னை மரியாளாய்ப் புலம்பிடும் துயரம்



விழி சிவக்க-விம்மிடும் நெஞ்சுக்குள் சோக எரிமலை வெடிக்க-
பசும் துளிர்களும் தீக்கிரையான மாதுயரம்
அல்லாவைத் தொழுதிட குருதியால் வுழு செய்து
குர்பானி எனப் படுகொலை புரிந்த மதப்பயங்கரவாதம்



St. Anthony's Church, Kochikade

உயிர் எரிய, உள்ளம் தணலாய்க் கொதிக்க
புதைகுழிகளில் மெழுகுவர்த்திகள் கரைந்துருக
சோகத்தீயில் -மெழுகாய் எரிந்துருகும் சொந்தங்கள்
மாலையிட்ட படங்களாய் மாறிய உறவுகள்



உறவுகளை நெஞ்சில் பொக்கிஷமாய் அடைகாத்து
உதிரும் கண்ணீர்ப் பூக்களால் மாலைகட்டி
துயரப் பெருமூச்சை தூபமாக்கி, பாரச் சிலுவையை
இதயம் சுமக்க கல்வாரிப் பாதையான வாழ்வு

மரித்த உறவுகளை மண்ணில் புதைத்து
மாறாத சோகத்தை நெஞ்சில் விதைத்தார்
மாலையிட்ட படங்களை பார்த்து-சொந்தங்கள்
மறவாத உறவுகளை நினைந்தழுதார்

கொலை வெறி பிடித்த மனங்களில் எரியும் குண்டுத் தீ
அமைதி கண்ட மனங்களில் ஒளிரும் அன்புத் தீ
விழியெல்லாம் கண்ணீர், மொழியெல்லாம் அழுகை-வினாவாய்
நொருங்கிய உள்ளங்களில் இறைவா ஏனிந்தக் கொடுமை?




விடை காணாத கேள்வி-நெஞ்சை கொடுங்கணையாய்
இன்றும் வருத்த, ஆறாத காயமாய் மனதில் சோகம்
கண்ணீர் சிந்தியும் கரையாத பாவம்
மதங்களோ, சாரமிழந்த உப்பான துயரம்



மதப்பயங்கரவாதம் உலகை அச்சுறுத்த
இனவாதம், மதவாதம், நிறவாதம்,சாதியம்
எரிநரகாய் உலகை வாட்டிட
உலகே சுடுகாடாய் மாறிடும் அச்சம்

நாளும் புதிய யுத்தங்கள் தொடர
உலக அமைதியோ எட்டாத நிலவான துயரம்
இன்றும் காயாத ஆபேலின் குருதி-இறைவனைக்
கதறி அழைக்க பாபேலை வழிபடும் அவலம்

உச்சி மலை நின்று உலக இராட்சியங்களைக் காட்டி-
அனைத்தும் என் வசம்- என்னை வழிபட்டால்-மறுநொடியோ
இவை அனைத்தும் உன் வசம்-சாத்தானின் வேதம்
மதப்பயங்கரவாதம், அன்பே சிவம் வாழ்ந்தறியும் தவம்







**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-29-09-2023*

# அருட் தந்தை மக்ஸிமிலன் கோபே

*( Rev.Fr. Maximilian Kolbe)*

---

இரத்தமின்றித், துப்பாக்கிச் சத்தமின்றி,-நச்சு வாயுவால்
பல்லாயிரம் யூதர்களைப் பலியெடுக்கும்-சம்ஹாரத்தின்
கொடுநரகாய் ஆஸ்விட்ச் சித்திரவதை முகாம்.





வீசு தென்றலும் வெண் மேகமும் அஞ்சி
விலகிச் செல்லும் நச்சுப் பூமியிது,
விஷ ஜந்துக்களும், நச்சரவங்களும்
மறந்தும் ஒதுங்கிடாத எரி நரகமிது.

காலனின் நச்சுக்கோட்டையிது-கைதியாய் வந்தவரெவரும்
கதவைத் தாண்டி-உயிரோடு வெளியே போனதில்லை.
விஷக்காற்றால் வீழ்ந்தவர் தவிர வேறெந்த கைதியுமிங்கே
"சுதந்திர காற்றைச்" சுவாசிப்பதுமில்லை.

உயிர்ச் சுடர் அணைவதா? எரிவதா? எனத் தத்தளிக்க,
ஒளியிழந்த விழிகளில் நம்பிக்கை ஊசலாடித் தவிக்கும்,
ஒட்டி உலர்ந்த வயிறுகளில் பட்டினிச் சாவு ஒளிர
அச்சத்தை நாளும் சுவாசிக்கும்-யூதச் சமூகம்

விஷ வாயுவை சுவாசித்தே உயிரிழக்க
நாட்ஜிகள் போலந்தில் அமைத்திட்ட
கொடிய வதை முகம் ஆஸ்விட்ச்.



சுதந்திரவானில் சுடர் வீசிய தாவீதின் நட்சத்திரங்கள்
விஷ வாயுவினால் விண்ணின்று மண்ணிற்கு
உதிர்ந்த விழும் விபரிதமான் நாட்கள் நாளும் இங்கே.

எரி நரகிலும் கொடிது ஆஸ்விட்ச்.-இங்கே
மலரும் பொழுது ஒவ்வொன்றும்-நடைப்பிணமாய்
வாழும் மானுடத்திற்கு மரண தினமாகும்

இன்றோ? இல்லை நாளையோ? நம் மரணம் என
மனம் நொந்து புலம்பிட ஊனும் உயிரும் அச்சத்தால்
தினம், தினம் உருகிக் கரைந்திடும், பிழைத்தவர்
இரவு முழுதும் மடிந்தவர்களை புதைத்து
மறு நாள் மடியும் நிலை தொடர்ந்திடும்

நெஞ்சம்தான் படைத்தவனைக் கூவியழைத்து
பதிலின்றி பரிதவிக்கும்,-விஷவாயுவால் -உயிரிழக்கும்
பல்லாயிரம் உறவுகளுக்காய் வாழும் உறவுகள்- நாளும்
கண்ணீர்த் தவமிருந்து உடல் மெலியும்.

பாதுகாப்பு அரண்களும், கண்காணிப்புக் கோபுரங்களும்
வேட்டை நாய்களும் காவல் செய்யும்
காலன் பூமியினின்று கைதி ஒருவர் தப்பினால்,
பத்துக் கைதிகள் பட்டினிச் சாவினால் உயிரிழப்பார்


The first monument to Maximilian Kolbe in Poland in Chrzanów



எழுதாத கொடுஞ்சட்டம் அமுலில் இருக்க, தப்பிக்க முயலும்
கைதிகக்கு சக அப்பாவிகளின் முகம் நெஞ்சை உறுத்த
தப்பித்தல் தவறானது என்பது கைதிகளுக்கு இங்கே
**பதினோராம் கட்டளையானது.**

***அன்று ஆஸ்விட்சில் ஒரு அரிய நிகழ்வு***

அஞ்சிடாதே மனமே, துஞ்சிடல் ஒரு நாள் நிஜமே!
அஞ்சி அஞ்சித் தினம் -ஆயிரம் முறை சாவதை விட-
உயிரை துச்சமாய் மதித்து, துணிகரமாய்த் தப்பித்தல்
வாழ்வே என்று சொல்லாமல் சொல்லி
தப்பிச் சென்ற கைதியின் துணிச்சல்

மோப்ப நாய்களும், கூட வேட்டை நாய்களாய்ச்
சிப்பாய்களும்-ஒன்றாய் வதை முகாமை உருட்டிப் புரட்டி
தப்பிய கைதியைத் தேடிக் களைத்திருக்க, தப்பிய கைதியால்
நாட்ஸிகளின் நஞ்சு நெஞ்சங்களில்-காட்டுத் தீயாய்
பற்றி எரிந்த கொலைவெறி

வாடி நின்ற கைதிகளெல்லாம் வரிசையாய் நிற்க
தேடி வந்த யமனும் பட்டினிச் சாவினால் வதைத்திட
தேர்ந்தான் பத்துப்பேரை.

இங்கொன்றும் அங்கொன்றுமாய்ப் பத்துப்பேரை தேர்ந்த
படைத் தலைவன் பரிகாசமாய் நகைத்தான்
சம்ஹாரத்தின் கடவுள் நானென்று.

தேர்ந்த பத்துப்பேருள் ஒருவர் குழந்தைபோல்
தேம்பியழுதார், மனைவியுண்டு குழந்தைகளுண்டு
என் வாழ்வில் கடமைகள் பல உண்டு
என்னை வாழ விடுங்கள்

கூப்பிய கைகளும், கொட்டும் விழி நீருமாய்
செப்பிய மொழிகேட்டும்
இரங்காத கல்நெஞ்சம்- வியந்திட
*"அவரிடத்தை எனக்குத்தாரும்"*



யூதர்களுக்கு புகலிடமளித்த"பெருங் குற்றத்திற்காய்"
கைதியான அருட் தந்தை மக்ஸ்மிலன் குரல்
மரணத்தைப் பரிகாசித்து மன்றாட்டாய் ஒலித்தது.

கல்நெஞ்சம் மெல்லக் கனிந்து-பின் கல்லாகிட
ஆச்சரியத்துடன் அயலானைக் காத்திட-தன்னை
அழித்திட விரும்பும் முதல் மனிதனை கண்டான்
கொடியவனும் இறைமகன் இயேசுவின் சீடர்
இவரென்றே தன்மனதில் உணர்ந்தான்.

"ஏற்றேன் உம் முடிவை" என்ற இரக்கமற்ற
அரக்கன், உண்ணா நோன்பிருந்தே
பத்துக் கைதிகளும் உயிரிழக்கப் பணித்தான்

செபத்திலும், தியானத்திலும் நாட்கள் கழிந்திட,
உணவின்றி, நீரின்றி உறவாய் நின்ற ஒன்பது பேரும்
மடிந்திட-உடல் தளர்ந்த நிலையில் "சாவும்"
வந்தது நஞ்சு கலந்த ஊசியின் வடிவில்




இவரும் என் மகன் என சாட்சியம் பகிர்ந்திட
இறைவன் தேர்ந்த அருட் தந்தை
இவருக்கும் கல்வாரிச் சிலுவையை ஈந்து
என் மகனே என மனம் நொந்த இறை தந்தை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-04-2023

# புழுதியில் விழுந்த சிலுவை

*Rev.Fr.Rodrigo*

---

வற்றாத கங்கையை விழிகளில் ஓடவிட்டு
உற்றார், உறவினர்போல் உலகை அழவிட்டு
உறங்குகிறாய், கற்றவரும்,
மற்றவரும் காமுறும் பெருமானே



பற்றறுத்த பாசமிகு நேசனே-
பாவிகட்கும் அருள்புரிந்த தேவமைந்தனே
உனைக் கொன்றவர்க்கு இரக்கமில்லையோ
நெஞ்சில் சிறிதும் ஈரமில்லையோ?

சத்தியங்கள் சாவதில்லை-உத்தமர்க்கோ
நித்தியத்திற்கும் அழிவில்லை-உடல்களை
கத்திகளும், துப்பாக்கிகளும் சாய்கலாம்-உத்தமர்தம்
இலட்சியத்தை ஆயுதங்கள் சாய்க்குமோ?

சத்திய மனங்களில் சத்தியமாய் நீ நிலைத்திருப்பாய்-
கத்தும் கடழேலும் வற்றிக் காய்ந்தாலும்
கடல் குளித்து மலை மோதும் காற்றும் ஓய்ந்தாலும்
கர்த்தருக்குள் வாழ்பவனே ஓயாது-மண்ணின்று
உன் பெருமை ஒழியாது, ஒருநாளும் மறையாது

காத்த கரங்கள்- கர்த்தர் காப்பார் என கூப்பிக்கிடந்திட
பூத்து மகிழ்ந்த விழிகள், பார்த்ததுபோதும் என மூடிக்கிடந்திட
வானகம் போனார் ஏழை மானுடர்காய் வாழ்ந்து வீழ்ந்த தேவமைந்தன்-
இங்கே, எண்ணிக் கலங்கிடாத மனங்களுமில்லை
எண்ணி கலங்கிடாதோர் மனிதருமில்லை

கள்ளமில்லாத அழகு முகத்தில் காலன் அம்பெனப் பாய்ந்த
துப்பாக்கி ரவைகள், வெள்ளைப்புறாவின் உயிரை
வெறியோடு குடித்திட, சொல்ல முடியாத சோகத்தோடு
வெள்ளமென திரண்டு வந்த மக்கள் கூட்டம்
விம்மியழும் ஒளியிழந்த கருநாள் இன்று

கண்டு மகிழ்ந்த தொண்டின் சிறப்பை-ஏழைகளின்
கண்ணீரைக் குணமாக்கிய அருமருந்தை
மண்ணுக்குள் விதைத்து, மனங்களுக்குள் முளைத்திட
விண்ணுக்கு அனுப்பிவைத்து-விம்மிடும் நெஞ்சோடும்

விழிமறைத்த நீரோடும் வாழ்த்துகின்றோம்
ஞானத்தவரோடு மகிழ்க என்றே-தந்தையே
வானத்தவரோடு வாழ்க என்றே

தேகங்களை உதிர்த்து தியாக மலர்களாய் பூத்திட்ட
மாமனிதர்களுக்கு எம் கண்ணீர் அஞ்சலி-மாலை வருமுன்-
வன்முறை உதிர்த்த பாசமலர்களுக்கு
எம் இதய அஞ்சலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**(லோக சமஸ்தா சுகினா பவந்து)**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-09-2023

Rodrigo rationalizes his move to the lower-Uva province as follows, “I came out to the village in July 1980, also as an act of reconciliation and recompense for the damage British Christians did to our peasantry in 1818”. In 1981, he was joined by Sister Milburga Fernando, a lecturer at Sevaka Sevana, and Sister Benedicta Fernandopulle, a qualified nurse in secular training. Together with the Buddhist priests and other community leaders, they transformed the centre into a clinic, a school, and small library to address the community’s health and education needs. Over the years, the centre also facilitated collaborations between the farming youth and university students to develop sustainable farming methods that enhanced the traditional chena and paddy cultivation methods familiar to the region for centuries.

However, the establishment of a multi-national cooperation named Booker-Tate Agriculture International, which began to cultivate sugar cane as a cash crop and established a sugar factory in Pelwatte, was to have a damning impact on the community efforts at Suba Seth Gedara. This community became increasingly concerned by the environmental impact caused by deforestation and the introduction of chemical fertilizers, and the economic impact on the traditional farming livelihoods of the region. This, compounded with the second JVP insurrection against the government, further alienated the rural youth from the economic centres of the country. Fr Rodrigo often clashed with the authorities on behalf of the youth in Buttala, who were prosecuted and persecuted by the state.

On November 10, 1987, Fr Michael Rodrigo was murdered by unidentified gunmen. According to one of his friends and colleagues, thirty years later, “the case has virtually been closed, though allegations persist that the killer or killers acted on orders from the highest levels of power…”.

---

Rev Fr. Michael Rodrigo**, a Catholic priest of the Missionary Oblates of Mary Immaculate (OMI) who was born in Sri Lanka in 1927 and passed away in 1987[1]. He is most well-known for his work and activism in Alukalavita Buttala with rural farmers and workers in the lower-Uva region[12]. He was a renowned theologian with two doctorates in Comparative Religions and Buddhist Philosophy from the Gregorian University Rome and the Institut Catholique de Paris[1]. He taught for many years at the National Seminary in Ampitiya Kandy, before he transferred to the seminary of Sevaka Sevana in Bandarawela[1]. Sevaka Sevana was a new experimental seminary founded by Bishop Leo Nanayakkara, which broke away from the western colonial model of training priests, and facilitated the indigenization and conscientization of the Sri Lankan Catholic church[1].

Fr. Rodrigo was a man of great vision and compassion, who dedicated his life to working for social justice and initiating true inter-religious dialogue with rural Buddhists in Buttala[2]. His work and legacy continue to inspire many people around the world[2].

I hope this information is helpful. Let me know if you have any other questions.

Source: Conversation with Bing, 1/11/2024
(1) Michael Rodrigo | Digital PUL. https://dpul.princeton.edu/sae_sri_lanka_dissidents/feature/michael-rodrigo.
(2) Revisiting the Vision of Fr. Michael Rodrigo – OMIUSA. https://www.omiusa.org/index.php/2021/11/16/revisiting-the-vision-of-fr-michael-rodrigo/.
(3) Fr. Michael Rodrigo Assassinated in 1987: A Man serving People .... All .... https://thuppahis.com/2017/11/13/fr-michael-rodrigo-assassinated-in-1987-a-man-serving-people-all-people/.

# கலைஞன்

---

குறளோவியம், தொல்காப்பியப் பூங்கா, பூம்புகார் எனத்
தமிழ் அன்னைக்கு முத்தாரங்கள் சூட்டிய தமிழ் மகன்
இன்பத்தமிழை செம்மொழி என்றே வானுயரப் போற்றி
எழுத்தால் வாழும் இறவாப் புகழ் படைத்த பாவலன்





குறள் வடித்த பெருமானுக்கு
குமரி முனையில் வானுயரச் சிலையெடுத்து
வள்ளுவர் கோட்டம் அமைத்த பெருமான்

தமிழ் பெண்மைக்கே உயர் இலக்கணமாம் கண்ணகிக்கு
சிலைவடித்து, சிலப்பதிகாரத்தை "பூம்புகாராய்"
கண்டு இரசிக்க கலை வடிவம் தந்த புதிய இளங்கோ

இன்பத்தமிழின் அடுக்கு மொழியை இடி யோசையை
நடிகர் திலகத்தால் உலகறியச் செய்த நாவலன்,
தாழ்த்தப்பட்டவரும் அர்ச்சகராகி ஆலயப்பணி புரியலாம்
சட்டம் அமைத்து, சாதியம் தகர்த்து, மூட நம்பிக்கை
ஒழிக்கப் பாடுபட்ட-"பராசக்தி பகுத்தறிவாளன்"

மக்கள் கூட்டம் புகழ்மாலை சூட
முடிசூடாத் தமிழ் காவலனாய்-தமிழக முதல்வனாய்-
பெயர் விளங்க வாழ்ந்த சாதுரியன்.-ஏழைகள் வாழ்வை
உயர்த்தி- எண்ணற்ற அரும் பணி புரிந்து
அரசியல் வானில் மங்காத சுடராய் பல்லாண்டு
சுடர் வீசிய உதய சூரியன்



வாழ்வோ பிரமிப்பாக, மண் நின்று விண்ணுயர்ந்த
கடின உழைப்பாளி, தமிழ் படைத்து தமிழர் நெஞ்சங்களை
கொள்ளை கொண்ட ஞானபண்டிதன்

வாழ்நாளெல்லாம்- அரசியல் போராளியாய் போராடி
இறந்தபின் புதைப்பதற்கும் - அண்ணா சமாதியருகே
இடம் கேட்டு வழக்காடிப் போராடி வென்ற புரட்சியாளன்
அமைதியில் உறங்கட்டும், தரணியில் தமிழன்
புகழ் ஓங்கிட-தமிழின் புகழ் ஓங்கட்டும்
தன்மானம் வாழட்டும்-வாழ்க தமிழ்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-26-5-2023*

# மகாத்மா–ஹே ராம்

**மகாத்மா** –அகிம்சையின் அவதாரம் நீ
சாதி, மதம், நிறம் கடந்த மானுடத்தின்
புதிய பரிணாமம் நீ





அடிமை இந்தியாவில் சுதந்திரச் சிந்து பாடிய அகிம்சைக் குயிலின்
விடுதலைக் கீதத்தை, சுதந்திர இந்தியாவில் இந்தியரே கலைத்தார்
கோடி மனங்களில் பூத்த வெண் தாமரையை
மாலை வருமுன் மதவாதக் கேடிகள் தீயிலிட்டு எரித்தார்

அன்னை கஸ்தூரி-உன் வாழ்வில் கலந்த அன்பின்
அபூர்வ சுகந்தம்-"கஸ்தூரி" மணந்த இல்லறம்
கடவுள் உனக்கீந்த அருள்வரம்.

வசதிகள் துறந்து, வீதிக்கு வந்து-எலலோரும் வாழ
விடுதலை தேடிய-***புதிய சித்தார்தன் நீ***
உன் குரல் கேட்டு அடிமை இருளில் உறங்கிய தேசம் விழித்தது
உன் எளிமை கண்டு'செல்வமும்" துறவு பூண்டு
உன் விடுதலை வேள்விக்குத் தொண்டு புரிந்தது.




தேச விடுதலைக்காய் ஆயுதம் ஏந்துவோர் மத்தியில்
படையின்றிப் பாதுகாப்பின்றி, நிராயுதபாணியாய்
சூரியன் அஸ்தமிக்காத வெள்ளையர் சாம்ராஜ்யத்தை
அகிம்சையால் மனந்திருப்பிய புதிய இறைமகன் நீ.

புரட்சிக் கவிஞன் பாரதியும் சிறைக்கஞ்சி
ஓடி ஒளிந்தபோது-சிறையிலும்
சுதந்திரச் சிந்து பாடிய புதுமைக் கவிஞன் நீ

நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், கவி இரவீந்திரநாத் தாகூர்,
முகம்மது அலி ஜின்னா, அம்பேத்கார்-கருத்துக்களோடு
ஒத்துப்போகாத நீ-உனக்கென வகுத்த பாதையில் நடந்தாய்
சத்தியமே தெய்வம் என்ற அசையாத நெறியில் உன் பயணம்
சாத்வீகமே தெய்வீகம் என்ற விடுதலைக் கானம்

கத்தியின்றி, இரத்தமின்றி தேச விடுதலைக்காய்-வரலாற்றில்
ஆன்ம சுத்தியோடு அகிம்சை வேள்வி யாத்த மாமுனியே
வானுயரப் பறந்த "யூனியன் ஜாக்கும்"-உன்
"அகிம்சைத் தென்றலில்" மயங்கியோ கீழே இறங்கியது.

உயர இருந்த வெள்ளையர் நீதி இருக்கையும்-உத்தமனே
உனைக் கண்டு எழுந்து நின்றே தன்னைக் கௌரவித்தது
உப்பும்- உன்னால் இந்திய சுதந்திரத்தின் இனிப்பானது
விடுதலைப் போராட்டத்தின் வியத்தகு ஆயுதமானது

வனவாசம்போன கதரும், கைராட்டினமும் திருவாசகமாய்ப் போற்றபட்டு
முடி சூடியதும் உன்னால், பால்ய விதவைகளினதும்-இந்து முஸ்லீம்
கலவரத்தால், பாழாய்போன பெண்களினதும்-வாழ்வில்-மறுமணம் எனும்
புது வசந்தம் வீசியதும் புரட்சித் தென்றலே உன்னால்.

தண்டி யாத்திரையும், உண்ணா நோன்பும்
ஒத்துழையாமையும், விடுதலை வேள்வியானது,
"செய்து முடி-அல்லது செத்து மடி" புது மந்திரமானது.

தீண்டாமை தீண்டாத உயர் ஜாதி- தென்ஆபிரிக்காவில்
"தீண்டத் தகாதவனானபோது" தீண்டாமையின் தீமையை
சமயத்தின் வறுமையை நீயும் உணர்ந்த அருமை.

தீண்டாமை நிலைக்க சாதியம் வகுத்த "மனுஸ்மிருதியால்"
உயர் ஜாதிக் கவசம் பூண்ட உன்னை,-தென் ஆபிரிக்க நிற வெறி
வெள்ளையர் "கறுப்பன்""தீண்டத்தகாதவன்" முத்திரை குத்தி
ஒதுக்கியபோது, சூத்திரனின் கசப்பை நீயும் சுவைத்தாய்
சாதியத்தின் பாரச் சிலுவையை நெஞ்சில் சுமந்தாய்

'மனு நீதி" கடந்த " மானுட அநீதியாய்" தீண்டாமையைக்
கண்டபோது உன் கண்கள் திறந்தனவோ?
கர்ணனின் கவச குண்டலம்போல் பிறப்பிலே பூண்ட உங்கள்
" ***உயர் ஜாதிக் கவசம்***""தென் ஆபிரிக்காவில்
வெள்ளையரின் நிறவெறியால் உடைந்து பிளந்ததுவோ?

பஞ்சமா பாதகங்களிலும் கொடிய கொடுமை தீண்டாமை
தீண்டாமையை ஓதும் வேதம் சாத்தானின் கீதம்?
தீண்டாமை நீதித்தராசிலும் நிறுக்க முடியாத பாவம்
ஏழைகளுக்கு வழங்கிய கொடிய சாபம்

சாதியத்தீயில் பிறவாத " மானுட சமத்துவ ஞானம்"
நிற வெறியால் -நெருப்பாய்த் தகித்து நெஞ்சில் பூத்திட
காந்தீய அகிம்சா ஞானம்-சாதியம், நிறம் கடந்த
சமத்துவத்தின் புது வேதம்?

“கடவுளே சத்தியம்” என தொடங்கிய உன் தேடலில்
“சத்தியமே கடவுள்” என ஞானம் பெற்ற
“புதிய அரிச்சந்திரன் “ நீ

தீண்டாமையால் ஒடுக்கப்பட்ட மானுடத்தை “ஹரிஜனராய்”
உருமாற்றியவனும் நீ-மேற்சட்டை இழந்த மானுடத்திற்காய்
தன் மேற்சட்டையையும் கொடுத்தே-“பேகனிலும்” உயர்ந்த
பெருவள்ளலும் நீ.-“அரை நிர்வாணப் பக்கிரி”
என கேலிக்காளான இறைமகனும் நீ





‘வந்தே மாதரம்” உன்னால் மந்திரமானது.
‘வெள்ளையனே வெளியேறு” வெள்ளையரை
அதிரச் செய்த வெடிகுண்டானது.

தேசம் காண நீ பூண்ட தீர்த்தயாத்திரை உனக்கு
“விழிப்புணர்வைத்” தந்தது, ஏழைகளின் கண்ணீரும்,
சாதியச் சுமையும், ஒடுக்கப்பட்ட தாய்க் குலத்தின்
கண்ணீரும் உனக்கு புதிய ஞானம் தந்தது.

***கிராமங்களே-இத்தேசத்தின் ஆன்மா***
ஏழைகளே இந்தியாவின் சொத்து -இந்திய
சுற்றுப் பயணம் கற்றுத் தந்த பாடம்

உப்பினால்-உள்ளங்களில் சுதந்திர நெருப்பை மூட்டி
உண்ணா நோன்பையும், பிரார்த்தனையையும்-கதரையும்,
இராட்டினத்தையும், ஒத்துழையாமை இயக்கத்தையும்
சாத்வீக விடுதலைப் போராட்ட வடிவங்களாக்கி
அரசியலில் புதுமை செய்த ஆன்மீகச் சித்தன் நீ





இந்திய விடுதலை வரலாற்றின் விசித்திரச் சித்தனே
உன் பாதையில் பூக்களை விட முட்கள் அதிகம்-பூ
மாலைகளை விட-உன் மனமும், தோளும்
சுமந்த சிலுவைச் சுமை அதிகம்.

வெள்ளையனை அகிம்சையினால் வெற்றி கொண்ட- பிதாமகன்
சுதந்திர இந்தியாவை சூரியன் உதிக்காத நள்ளிரவில்
பெற்றுத்தந்த சுதந்திர புருஷன்- கோடி மனிதர்களின்
நெஞ்சைக் கொள்ளை கொண்ட -தேவமகன்

இந்து மதவாதிகளால் குண்டடிபட்டுச் சாய்ந்திட
இந்தியாவிலும் இறைமகனை கொல்லும் அநீதி
மதவாதிகளுக்கு நீதியானதென்ன? ஹே ராம்

சத்திய தரிசனம் நிதரிசனமானபின்
அகிம்சாமூர்த்தியின் அவதாரமும் நிறைவானதோ?
அகிம்சை- அரசியல் உலகிற்கு வேண்டாத ஒன்றானதோ?

இந்திய சுதந்திரம் நள்ளிரவில் கிடைத்ததாலா
**“இந்து” உறக்கம் கலையாத இந்த மானுடம்**
“விழிப்புற்ற மனிதத்தை”
வன்முறையால் வீழ்த்தி தன்னைத் தாழ்த்தியது?



கோட்ஸேயின் குண்டுகளும்,-வெள்ளையருக்கு அஞ்சாத
அகிம்சை நெஞ்சை தோண்டி-சாதி மதங்களை கடந்த
மகாத்மாவின் “ஆத்மா”எங்கே என்று தேடின
நெருப்பாய் நுழைந்தவை-அகிம்சைக் குருதியில் நீராடி
வன்முறை ஒழிக என்று அமைதி கொண்டன




ஓ தேசபிதாவே!சூரியன் அஸ்தமிக்காத வெள்ளையர் சாம்ராஜ்சியத்தில்
கறுப்புஅடிமைகளும் சுதந்திர காற்றை சுவாசிக்க
வெள்ளையர் கேட்காத வரமாய்-இந்து மதவாத கொள்ளையர்
உன் சுவாசக் காற்றைப் பறித்ததென்ன?

உன் வாழ்வு பாடப் படாத புரட்சிக் கவிதை.-உன் உயிர்
பிறந்த மண்ணுக்காய் நீயீந்த பெருங்கொடை.

சாதி மதங்களுக்கு அடிமையாகி நாறி அழுகிய சமூகம்
வெள்ளையர் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்றாலும்
சத்திய தரிசனமின்றி ஏழையானது

சாதி மதங்களை கடந்த சத்தியசீலனை கொன்றதால்
ஆன்மிக விடுதலை பெறாத அடிமைத்தனம் நிரூபணமானது.



ஓ தேசமே!, உன் ஆன்மீக விடுதலைக்கு-சத்திய யுகமும்
புதிய அவதாரங்களும் தேவை-தவமிரு

சுற்றிய இராட்டினம் நின்றது, சத்திய ஒளி
வீசிய தீபம் அணைந்திட
நல்லோர் விழிகளில் கண்ணீர் பூத்தது

சத்தியம் சமயம் கடந்த தெய்வம்
சுத்த சைதன்யமே ஆன்மீகச் சுதந்திரம்
தேசமே நீ அறியாமல்போனதென்ன?

அகிம்சையால் பெற்ற சுதந்திரத்தை
அனுவாயுதங்களால் காத்திட முயலும் கவலையில்
இனி ஒரு மகாத்மா இங்கு பிறவார் என்ற
அசைக்க முடியாத நம்பிக்கை நெஞ்சை வருத்துது.



மனுமகனுக்கு இளமையில் சிலுவையும், அகிம்சையின்
தலைமகனுக்கு-முதுமையில் துப்பாக்கிச் சூடும்-
“மதவெறியர்களின் பரிசாக”
மானுடத்தின் மகத்தான பரிணாமங்கள்
“மதங்களுக்கு’ வேண்டாத ஒன்றானதோ?”

மானுடத்தை இழிவு செய்யும் ஊனமுற்ற மதங்களும்
நாறிடும் இன, மத, மொழி, நிற, சாதிக் கொடுமைகளும்
உலகை விட்டொழியும் நாளே-**மானுடத்தின் சுதந்திர நாள்.**

“வல்லமையே நியாயம்”“வன்முறையே நீதி” என்ற உலகில்
“சத்தியமே தெய்வம்” “அகிம்சையே என் தர்மம்”
என்று முழங்கிய மாமனிதனே
கண்ணுக்கு கண், பல்லுக்கு பல் என்ற இழிந்த நீதி- ஒழிந்து
எதிரியையும் அன்பு செய் என்ற உயர் நீதி வாழ
உயிர் கொடுத்த உத்தமன் நீ



“மதப் பயங்கரவாதம்” நீதியாக
அன்பு இறைவனுக்கு-அசுர முகமூடி
அணிவித்த மதவாதம் கொடிய பாதகமானது

கண்ணனின் புல்லாங்குழலில்-“அகிம்சை “மீட்ட முடியாத
அதிசயராகமானதோ? யுத்தங்களுக்குப் பின்னால்-மௌனித்த
விதவை, அநாதைகளின் கண்ணீரும் அழுகையும்-கண்ணனின்
புல்லாங்குழலிற்கு எட்டாத ‘எட்டாம் சுரமானதோ?”



யுத்தமெல்லாம் வன்முறையின் வழிகளே, “தர்ம யுத்தம்”
என்பது வெறும் மாயையே, பகைமையைப் பகைமையால்
வெல்ல முடியாது, பகைமையை அன்பினால் தணியுங்கள்
தொன்று தொட்டு வரும் தர்மம் இதுவே

கண்ணனின் குருக்ஷேத்திர யாத்திரை
பலராமனின் தீர்த்த யாத்திரை- மாறுபட்ட துருவங்களே
அவதார புருஷர்களும் தீமையை அழித்திட ஆயுதங்களை
தேர்ந்தபோது-நீ மட்டும், தீமையை மனம் மாற்றிட
-அகிம்சையைத் தேர்ந்ததென்ன?



இரத்தத்தாலும் நெருப்பாலும் எழுதப்பெற்ற
விடுதலை வரலாறுகளுக்கு மத்தியில்
தர்மத்தில் நின்று அகிம்சையால் முன்னெடுத்த
உன் விடுதலை போராட்டம்-சத்திய குருஷேத்திரம்
கிறிஸ்துவின் அன்பின் வேதம்

மகாத்மாவும் நீ! மகா புருஷனும் நீ!
அகிம்சை என்னும் வேதத்தை கீதமாக்கிய
அவதாரம் கடந்த அதிசயன் நீ

" வல்ல யாவே" பழைய ஏற்பாட்டுப் பாத்திரமாயிட
கண்ணனும் புராண காலத்து அவதாரமாகிட
வரலாறாகி வாழும் மாமனிதன் நீ மட்டும்தான்,
உன் புரட்சிப்பாதையில் உனக்குப்பின் ஏனோ யாருமில்லை.
அகிம்சை வழி ஒரு வழிப்பாதையோ?






இந்திய சுதந்திர தினத்தில்-முப்படைகளோடு,
பேரழிவு ஆயுதங்களை ஊர்வலமாக்கி
"வல்லரசுக் கனவினில் மூழ்கிடும்." பாரதம்
"காந்தியம்" தாண்டிய இந்தியாவின் யாத்திரையில்
அகிம்சாமூர்த்தி என்றோ வாழ்ந்த பாத்திரம்?

இந்து பாகிஸ்தான் எல்லைகளில் இராணுவம் குவிந்து கிடக்க
சிந்திடும் குருதியால் எல்லைகள் சிவந்திருக்க
"காஷ்மீர் ரோஜாவும்" முள்ளாய் மலர்ந்திருக்க
இன்னோர் குரு க்ஷேத்திரத்திற்காய்-நாளும்
அமைதியை அச்சுறுத்தும் இராணுவ ஒத்திகைகள்

காந்தியப் பாதையும் புதர் மண்டிக் காடாகிட
யுத்தப்பாதையோ அணுவாயுதங்களால் நவீனமயமாகிட
உறங்கிக்கிடக்கும் எரிமலையாய் அணுவாயுத யுத்தம்



காந்தியப் போதனையை கேளாத தேசம்-அமைதி காணாது
"குருதிக் கங்கை பாயாமல், பேரழிவைச் சுவைக்காமல்-
யுத்த கோஷம் ஓயாது.- "அசோக ஞானம்" கிட்டாது

அன்பு மதங்களும் மனிதனை மாற்றவில்லை
அகிம்சையின் புதல்வனைத் தெய்வமும் கைவிடவில்லை
அறிவுக் கனியால் பிளவுண்ட மனம்-இன்றும்
"நிர்வாணியாய்" ஓடி ஒளியும் அவலம் மாறவில்லை

இந்து- முஸ்லீம் நல்லுறவுக்காய் நீ யாத்த நோன்பும்
இலவுகாத்த கிளியின் கதையானதே?-தேசம் இரண்டானபின்
இந்திய சுதந்திரத்திற்காய் சிந்தாத இரத்தத்தை-
இந்த முஸ்லீம் சகோதரர் சிந்திட
குருக்ஷேத்திர யுத்தத்தையும் மிஞ்சிடும் யுத்தம்-மீண்டும்
தொடங்கிடும் என்ற அச்சம் தொடர் கதையானதே!



மனிதனை தன் சாயலில் இறைவன் படைத்திட
மனிதனோ தன் சாயலில் இறைவனைப் படைத்து
“ மதங்களைப் பெருக்கிட, ” அழிக்க முடியாத
அரக்கனாய் மதப்பயங்கரவாதம்



*“ரகுபதி ராகவ ராஜாராம் –பதித பாவன சீதாராம்*
*ஈஸ்வர அல்லா தேரே நாம் சப்கோ சன்மதி தேபகவான்”*

ஓ ராமா, ரகு வம்சமே, வீழ்ந்தவரை உயர்த்தும் உன்னதரே
உன்னையும், உன் அன்புப் பத்தினி சீதையையும் வழிபட வேண்டும்-
அதி உயர் சக்தியே இறைவன்-ஈஸ்வர, அல்லா எல்லாம்
ஒரே கடவுளின் நாமங்களே-இறைவா
எங்களுக்கு சமாதானத்தையும், சகோதரத்துவத்தையும்
கொடுங்கள், நாங்கள் அனைவரும் உங்கள் பிள்ளைகளே
மனித குலத்தின் இந்த நித்திய ஞானம் தொடர
உங்களை வேண்டிக் கொள்கின்றோம்

***வெள்ளைப் புறாவை வீழ்த்திய-வேடனோ மதவாதி***
***வெண் தாமரையைத் தீய்த்த மூடரோ உயர் ஜாதி***
***மண்ணில் விழுந்தபோது மண்ணும் நொந்து சிவந்தது***
***ஹே ராம்-உன் வாயில் எழுந்த கீதமும்-ஆபேலைப்போல்***
***இறைவனைக் கூவி அழைத்தது***




வெள்ளையர் சிந்தாத அகிம்சையின் குருதியை-
சுதேசிகள் சிந்திய பாவம்-முஸ்லீம்கள் செய்யாத பாதகத்தை
இந்துத் தீவிரவாதம் யாத்த அசுர யாகம்

சாதியத்தால் சகோதரத்துவதை அடக்கி ஆண்ட இனம்
வெள்ளையர் அடிமைத்தனத்தில் கைகட்டி சேவகம் புரிந்து
இனக்கலவரத்தால் மூச்சுத் திணறி-சுவாசிக்க
மகாத்மாவின் ஆவியைப் பறித்த மதவாத வேசித்தனம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-2-10-2023

# புதிய கீதை—Marie Colvin-2

அண்ணண், தம்பி உறவே பகையாகி
குரு, சீடர் வரமோ சாபமாகிட,
அரியணைக்காய்-ஐந்து மனைக்காய்
குருஷேத்திர பூமியில்-கொடிய யுத்தம்.






யுத்தச் சூதாட்டத்தைப் பாண்டவரும், கௌரவரும் ஆடிட
பகடைக் காய்களாய் உறவுகளும், குடிகளும்
வெட்டுண்டு வீழ்ந்தே மீளாச் சோகத்தில் மூழ்கினார்.

அழிந்தவர்களும், அழிக்கப்பட்டவர்களும், அநாதை, விதவை,
அங்கவீனராய் உருவழிந்தவர்களும் இலட்சோபலட்சம்-
இவர்கள், வியாசனும் கூற மறந்த சோக வேதங்கள்
ஐங்கரனும் எழுத மறந்த கண்ணீர்ப் பாத்திரங்கள்

மதிமயங்கி நின்றவனும்-கீதையினால் தெளிவுற்றான்
காண்டீபம் அதிர்ந்திட, தேவதத்தம் முழங்கிட
கர்மயோகியாய் யுத்தம் புரிந்து ரத்தம் சிந்தி
பகைவரை அழித்த அருச்சுனன்.

ஐந்து வீடுகளுக்காய் போரிட்டவர்கள், அரியணையையும்,
அரண்மனையையும் சுவீகரித்திட, அஞ்சாது போரிட்டு
மாண்டவர்கள் வீர சொர்க்கத்தை சொந்தமாக்கிட
யுத்தம் புரியாத- ரத்தம் சிந்தாத, கீதையறியாது -பிணமான
சொந்தங்களைச் சுற்றி கண்ணீர்க் கோலமிட்ட மானுடம்



தருமனே அதர்ம வழியில் -குருத்
துரோணரை வீழத்திடப் பொய்யுரைத்தான்
கீதை சொன்னவனே-நிராயுதபாணி
கர்ணனின் வாதைக்குப் பாதை அமைத்தான்.

கீதையில் ஆரம்பித்து-மன்னன் துரியோதனன்
வாதையில் முடிந்த இரத்த வேள்வியில்
அப்பாவிகளின் சோகம் அவிர்பாகமானது

ஒப்பாரியும் புலம்பலும், ஒப்பற்ற வெற்றியை விழுங்கிட
விதவைகளும், அநாதைகளும் குருஷேத்திர பூமியை நிரப்பிட
இரத்தம் சுவைத்து இன்புற்ற க்ஷத்திரிய தர்மம்
அப்பாவிகளின் கண்ணீரை உப்பென உதாசீனம் செய்த வர்மம்?-

***தர்ம யுத்தம் என்று ஒன்றிலை***
***யுத்த வெற்றியெல்லாம் நிரந்தரமில்லை***

யுத்தம் காண சஞ்சயனுக்கு ஆற்றல் கொடுத்த
வேதவியாசன்-தர்மம் உணரத் தன் குருட்டு மகனுக்கு
ஏனோ '***இதயம்***'' கொடுக்கவில்லை.

கண்ணிழந்த மன்னனுக்கு-ஐந்து மனைகொடுக்கப்
பிடிக்கவில்லை, மண்ணிழப்பது பிடிக்கவில்லை
மகன் மணி முடியிழப்பது சகிக்கவில்லை
கிருஷ்ணன் சொன்ன கீதை புரிந்தும், புரியாத நிலை

அகங்காரம் துறந்து, சத்திய தரிசனம் காண ஆவலில்லை
அமைதியில் ஆர்வமில்லை, நீதியில் பிரியமில்லை
விமோசனமின்றி விசனத்தில் மூழ்கிய அந்தகன்

மடிந்தவர் மனைவி, பிள்ளைகளின் சோகம்-
வியாசர், விநாயகர் நெஞ்சைத் தொடவில்லை,
வியாசன்கூட காவியக் குருடன்போலும்
விநாயகன்கூட யுத்தப் பிரியன்போலும்

யுத்தத்தில் ஆண் வர்க்கம் சிந்திடும் இரத்தம் வீரம் பேசிட
அப்பாவிப் பெண்ணினம் நாளும் சிந்தும் கண்ணீர்
விநாயகனுக்கும், வேதவியாசனுக்கும் காவியத்திற்கு
வேண்டாத வியாக்கியானம் ஆனதோ?

வெள்ளைப் புறாக்கள் வீடு திரும்பாத மாலைப்பொழுதுகள்
விருந்துண்ட கழுகுக் கூட்டங்கள் மலைமுகடு திரும்பாமல்
இரத்தபோதையில்-குருக்ஷேத்திர யுத்தகளத்தில்
விழுந்து கிடந்த கொடிய இரவுகள்.

உலகின் முதல் யுத்தச் செய்தியாளன்-சஞ்சயன்
சொன்ன செய்தி பலனற்றுப்போனது, புதிய யுத்தங்கள்
தொடங்கிட "பகவத் கீதை" மட்டும்
இன்றும் நிலை பெற்று வாழுது.

இன்றும் மண்ணுக்காய், மணிமுடிக்காய் யுத்தங்கள்.
ஆண்டவனை கூவியழைக்கும் அப்பாவிகளின் இரத்தங்கள்
இறை நெஞ்சைத் தொடாமல் மனிதத்தை எரித்து
மண்ணைச் சிவப்பாக்கும் பயங்கரவாதங்கள்

சஞ்சயனைத் தாண்டிய பரிமாணத்தில்-தாயே
உன் செய்திகள்-கண்ணில்லாத மன்னர்களின்
கல்நெஞ்சைக் கரைக்கும் -உன் காணொளிகள்.

யுத்தங்கள் ஓயவில்லை, ஆயுதப்போராட்டங்கள் ஒழியவில்லை
அகதிகளின் அழுகுரல் விண்ணை எட்டவில்லை ? இறைவனை
எவரும் கண்டதில்லை-மதவாத மாயக் கற்பனை ஓயவில்லை?



"ஆஸ்விட்ச்" விஷவாயு கூடங்களில் விட்டில்களாய்
விழுந்த மடிந்திட்ட இலட்சோப லட்சம் யூதர்களின் கூக்குரல்
"வல்ல யெகோவாவை" வாட்டிட-இன்று யூதரோ
உரிமைக் குடி மக்கள், பாலஸ்தீனரோ அகதிகள்

***மத்திய கிழக்கில் எரிந்தும் கருகாத முட்செடியாய்***
***அவியாத யுத்த நெருப்பு***

"யெகோவாவும்"- "அல்லாவும்"மதம் மாறி
ஓயாத யுத்தத்தை நடத்திட
"சீயோனிஸ்டுக்களாய்" "ஜிகாதுகளாய்"
மனம் மாறிய பயங்கரவாதப் பக்தர்கள்

அழுகைச்சுவரிலும், அல் அக்ஸா பள்ளிவாசலிலும்
தொழுகைச் சத்தங்களோடு ஒலிக்கும் துப்பாக்கி வேட்டுக்களும்,
ஒப்பாரியும் புலம்பல்களும் உலகை துயரத்தில் ஆழ்த்தி
காணாத இறைவனைக் கூவி அழைக்கின்றன



இரட்டை கோபுரங்களில் மோதி வீழ்ந்த விமானங்களோ
"சிலுவை" வடிவங்கள்- அப்பாவிக்
கிறிஸ்துக்கள் சுமந்த இரும்புச் சிலுவைகள்?

மத்திய கிழக்கில் ஓயாத யுத்தம்
மதவாத்தின் கொடிய விகாரமாய்
இஸ்லாமியத் தீவிரவாதம்

இனவாதப் பிக்குகளும் சீவர ஆடையைச் சிவப்பாக்கிட
ஈழத்தமிழன் இரத்தம் தேடுகின்றார், தீபெத்தில் , தலை லாமாவின்
சீடர்களும், தீப்பந்தமாய் தம்மை எரித்தே-செஞ் சீனாவுக்கு
எதிராய் "செங்கொடி" பிடிக்கின்றார்

உக்ரேன் எரிந்திட-ரஷ்யாவின் ஆக்கிரமிப்பு-நாளும்
வட கொரியாவின் ஏவுகணைகளால் வானில் தீ மிதிப்பு
உலகெங்கும் யுத்த நெருப்பு, பச்சை வீட்டு வாயுக்களால்
பூமித் தாய் நெஞ்சிலே கொதிப்பு

பாபர் மசூதி இடிந்து, இராமர் கோயில் எழுந்திட,
காவிகளிலும், காந்தியின் இரத்தத்திலும்-மாறாக் கறையாய்
இந்து மதவாதம், மதவாதிகள் கையில் யுத்த வேதம்.
குருட்டு நீதிதேவதையின் கையில் நீதித் தராசு

ஏகன் இறைவன், சிவசக்தியாய் நின்றவன்
மும்மூர்த்திகளாய்க் காட்டியவன்
நான்கு வேதமாய் இருப்பவன் -மானுட
அவலத்தை காணாத அவலம்

ஐங்கரன் எழுதாததை, ஆறுமுகன் அறியாததை
ஏழுமலையான் சொல்லாததை, அட்டதிக்குப் பாலரும்
நவகிரகங்களும் அசட்டை செய்ததை, அவதாரம்
காக்கத் தவறியதை, ஒரு கண்ணால் தாயே நீ கண்டு
துயர் பொங்க, தேவர்களின் தூக்கம் கலையப் பாடினாய்



மானுட அவஸ்தை காணாத மகா புருஷர்களுக்கும்
விழியில்லை, அந்தகன் திருதராட்டினாய் இவர்கள்?-
இல்லை, காந்தாரிபோல் கண்களை கட்டிக்கொண்ட
கற்புக்கரசிகளோ இவர்கள் ஒன்றும் புரியவில்லை.

கலிங்கப்போரில், யுத்தத்தின் கோரத்தை விழிகள் காண-
கருணாமூர்த்தியின் கொல்லாமை வேதத்தை இதயம் கேட்க
பௌத்தம் தழுவிப் புது மனிதனாய், அகிம்சையின்
அன்புக் காவலனாய் மாறிய சாம்ராட் அசோகன்

வெள்ளைப் புறாவைச் சுட்டு வீழ்த்தி-ஒலிவ கொள்ளிகளில்
சமைத்து உண்ணும் யுத்த வெறியர் இரத்த விடாய் தணியுமோ?
உலகில் அமைதி என்றுதான் நிலவுமோ?

கீதையறியாத சோகத்தை, மாமன்னன் அசோகனை மகானாய்
மனம் மாற்றிய யுத்தத்தின் கொடுமையை, யுத்த வெறியர்களும்
மனம் மாறிடப், பாற்கடலில் பள்ளிகொள்ளும் பரந்தாமன்
துயிலும் கலைந்திட யுத்த பூமியினின்று உருக்கமாய்த் தாயே
நீ பாடினாய், புதிய சமாதானக் கீதையாய்க் கூறினாய்

ஈழப்போரில் உன் ஒரு விழியும் பறிபோக,
ஹொம்ஸ் நகரில் உன் உயிரும் பலியாக
உன் பாடலோ ஓயவில்லை-
யுத்த வெறியாகளின் இரத்தவிடாயே தீரவில்லை





உன் கீதை, உலகம் கேளாத புதிய வேதம்
யுத்தங்கள் ஒழிந்து, மனிதம் வாழ
மதம் தாண்டிய அன்பின் கீதம்

யுத்தத்தின் அவலத்தை, இரத்தம் சிந்தும் கொடுமையை-
கண்ணீர் சிந்தும் பெண்மையைக் -நாம்
உன் விழிகளால் காணப் பார்வை தந்தாய்-
அமைதிப் பிரியராய் மனம் மாற, நற்செய்தி சொல்லி
உன்னையே உயிர்த் தியாகம் செய்தாய்

***யுத்த பூமியில் உன்னையே பலியாக்கிய***
***புதிய கிறிஸ்து நீ அம்மா***

யுத்த பூமியில் உன் இரத்தத்தை
அமைதியின் தீர்த்தமாய்த் தெளித்த இறைவன்
அநீதி கண்ட கொதிக்கும் உன் ஆத்மா
சாந்தி அடையத் தன்னிடம் அழைத்த முதல்வன்

யுத்த பூமியில் உன் செய்தியே அமைதிக்கான புதிய கீதை
ஆயுதங்களைக் களைந்து, அன்பில் நிலைத்து
நீதியை மதித்து, அண்ணன் தம்பியாய் உறவாட-
குருஷேத்திர பூமியில் அமைதியோ பெருவிருந்து

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்-பூவுலகில்
நல் மனத்தவருக்கே அமைதியும் உரித்தாகும் நாளே
கிறிஸ்துவின் பிறப்பு- மானுடத்திற்கு மீட்பு

ஒழிக யுத்தம் !. ஓங்குக அமைதி
***வணங்கி வாழ்த்துகிறேன் தாயே நீ வாழி***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-2-10-2023

# Marie Colvin-நற்செய்தி





21.2.2012 குண்டுகள்- இரத்தம் கேட்டு கொலைவெறியொடு
கர்ச்சிக்கும் ஈழ பூமியில், அடக்குமுறையின்
கோரவடிவங்களும், பாசிசத்தின் அருவெறுப்புகளும்
கூடி குலாவி எரிநரகை சிருஷ்டிக்கும்.

காயீன் சிந்திடும் ஆபேலின் இரத்தம்
ஆண்டவனை கூவியழைத்து, வான் முகடுகளில்
எதிரொலித்து, பிணமேடுகளில் ஊமையாகப்
பூமி சிவக்கும், கடல் கண்ணீரால் கரிக்கும்

யுத்த நெருப்பில் சத்தமின்றி எரிந்து சாம்பலாகும் மானுடம்
கண்ணீர் கங்கைகளில் கரைந்துபோகும் தொப்புள்
தாலி உறவுகள், வல்லாங்கால் வாழ்விழக்கும் கன்னிகள்



வசந்தகால பள்ளிப்பருவம் வலிந்து சுமக்கும்
துப்பாக்கிச் சுமைகளால் வரண்ட பாலையாகிட
“*மழலையர் படையணியாய்*”களப்பலியாகும் பிஞ்சுகள்.

கத்தும் கடலேழும் கண்ணீரால் உப்பாகும்
சிதையுண்ட மனிதம் நாய் நரிகளுக்குணவாக
பதுங்கு குழிகளும் கல்லறைகளாகும்

இரத்தக் காட்டேறிகளின் யுத்தகோஷங்களால்
பூமியெங்கும் ஆறாத காயங்கள், கடவுள்-சாமி எல்லாம்
கல்லாய், சிலையாய்ப் போன மாயங்கள்.

யுத்தத்தின் கோர யதார்த்தத்தை நேரில் பார்த்து
காணொளியால் செய்தியாக்கி-தூங்கிக் கிடக்கும்
உலகை தட்டியெழுப்பும்-செய்திப் போராளியாய்
மானுட மனச்சாட்சியாய் தாயே நீ



மானுட மீட்சிக்கான உன் முயற்சி-பாற்கடலில் பள்ளிகொள்ளும்
கிருஷ்ண பரமாத்மாக்களை எழுப்பும் புதிய பள்ளி எழுச்சி-
ஆயுதங்களைக் களைந்து விட்டு அண்ணன் தம்பிகளாய் உறவாடி
அசோகனாய் மனம் திரும்பிட, நீ விடுக்கும் அமைதிக்கான நற்செய்தி

யுத்த பூமியில் அப்பாவிகளின் ஒப்பாரியும், புலம்பலும்
உலகின் செவிகளை எட்டாதபோதும், ஆறாய் ஓடும் இரத்தம்-
குருட்டு மானுடத்தின் கண்களுக்கு புலப்படாதபோதும்,
கல் நெஞ்சைத் தொடாதபோதும், ஓயாத உன் முயற்சி
தளராத உன் முயற்சி-புதிய கீதையாய் உன் நற்செய்தி



யுத்தக் கொடுமை தொடர்ந்த போதும், பதுங்கு குழிகளில் ,
குழிமுயல்களாய் குண்டுவீச்சுகஞ்சி நடுங்கிவாழும்
அப்பாவிகளின் நிலை மாறாத போதும்-உன் இதயத்தில்
வடியும் இரத்தம் உன் பேனாவை உயிர்ப்பிக்கும்-உன்
ஒருவிழி கண்ணட கோரக் காட்சி, காணொளி-திரைகளில்
இரு விழி படைத்த மனிதருக்கு கண்ணீரை வரவழைக்கும்.

செச்சனியா, கிழக்குத் தீமோர், லெபனான்-லிபியா
ஈராக்-ஸ்ரீலங்கா-சிரியா என யுத்த பூமியெங்கும்
உன் தீர்த்த யாத்திரைகள், விழுந்து கிடக்கும் மானுடத்தின்
காயங்களை ஆற்றிட, நல்ல சமாரியனாய் சேவகங்கள்.

கலவர பூமியில் நிராயுதபாணியாய் உன் நிலவரம்
கவலையளிக்கும் போதெல்லாம் துணிச்சலான உன் சிரிப்பு
நீயும் ஒரு ஜான்சிராணி என்பதை நினைவூட்டும்



அச்சமூட்டும் சூழலில் -அன்னையே உன் திருப்பணி
ஆனந்ததாண்டவமோ- இல்லை உயிர்ப் பலி கேட்கும்
துர்க்கைக்கு உன் உயிர் சிவப்பிரசாதமோ?



மதவாதம்-இனவாதம், சர்வாதிகாரம், பயங்கரவாதம்,
பாசிச வாதம் உலகை அச்சுறுத்தும்போது
அப்பாவிகளின் கண்ணீராய்-குருதியாய் , மனச்சாட்சியாய்
கல் மனங்களைத் தட்டிய எழுப்பும் உன் செய்திகள்

அப்பாவி மானுடத்திற்கு யுத்த பூமியில் நின்ற
இரத்த சாட்சி நீ, அராஜக வடிவங்களுக்கு-உன் உயிரால்
சாவுமணி அடித்த வீரமங்கை நீ

ஆயுதவாதிகள் மத்தியில் -நிராயுதபாணியான
உன் போராட்டம்-அகிம்சையின் புதிய பரிணாமம்.



ஈழ யுத்தத்தில் நிகழ்ந்த கோரங்களை குருட்டு மானுடம் காண
ஒரு விழி ஈந்த ***புதிய கண்ணம்மை நீ,*** எஞ்சிய ஒரு விழியையும்
"***நெற்றிக்கண்ணாக்கி***" யுத்த நெருப்பை சுட்டெரிக்கும் திருப்பணியில்
சிரியா –ஹொம்ஸ் நகரில் உன் இறுதித் திருப்பலி

உலகம் விழித்திட-நீ புரிந்த தியாகம்
"***புனித செய்தி யாகம்***"

இருவிழி குருடர் மத்தியில், உன் ஒரு விழிப்பார்வையும்
புது வெளிச்சமானது, குருட்டு திருதராட்டினர்களும்
யுத்தத்தின் கோரம் காண -உன் ஒரு விழியும்
நீ ஈந்த வரமானது.

அச்சமூட்டும் சூழலில்-உயிரை துச்சமாக மதித்து
ஆற்றிய நின் அரும் பணியும், மிச்சமின்றி உன் உயிரையும்
உச்சவிலையாய்ப் பறித்ததென்ன?



வாழும்போது- உன் பேனா வடித்த இரத்தம்-ஒடுக்கப்பட்ட
மானுடத்திற்காய் செங்கொடி பிடித்தது- மடிந்தபோதும்
சிதைந்த உன் உடலை செங்கொடியாக்கி-தாயே
வன்முறைக்கெதிரான வலிய செய்தியாய் நீயானாய்

வானொலியிலும், காணொளியிலும், செய்தி சொன்னவளே
செய்தியாய் போன துயரம், யுத்தக் கொடுமையைச் சத்தமாய்
சொன்ன குரல்-யுத்தத்தில் ஊமையாகிப்போன அவலம்.
***யுத்தத்தின் கோர யதார்த்தமே?***

மனைகள் இடிந்து பாழாக, ஊரும், கழனியும் காடாக
உறவு இழந்து சொந்தங்கள் அநாதையாக
குண்டுகள் மூட்டிடும் கோரத் தீ
அகதிகள் கண்ணீரால் அணையாத் தீ



***என்று தணியும் யுத்த வெறியரின் இரத்தத் தாகம்***
***என்று மடியும் யுத்த மோகம், பயங்கரவாதம்?***

கண்கள் இரசிக்க யுத்தம் சினிமா அல்ல
காதுகள் இரசிக்க குண்டுச் சத்தம் இசையல்ல
அப்பாவி மானுடத்தின் துயரம் நடிப்பல்ல
அகதி வாழ்வு சொர்க்கமல்ல-எரி நரகம்



மதம், மொழி, இனம். நிறம் மனிதத்தைப் பிரிக்க
மண்ணில் எல்லைகள் வகுக்க-தொடரும் யுத்தங்கள்,
குருதியும், கண்ணீரும் மண்ணை நனைக்க
காணாமற்போன தெய்வங்கள்?

அழுகைச் சுவரிலும், அல் அக்ஸா பள்ளியிலும்
இராமர் கோயிலும், பாபர் மசூதியிலும்
தொழுதும் மாறாத கல் மனங்கள்

***ஒழிக யுத்தம்- ஓங்குக அமைதி***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-02-10-2023*

# மாதுலுவாவே சோபித தேரர்

---

ஈழத் தீபகற்பத்தில் இன்றோர் அஸ்தமனம்
மறைந்ததும் மனங்களை மாளா துக்கத்தில் ஆழ்த்தியதும்
மாமனிதரின் திடீர் மரணம்





சீவர ஆடைக்குள் ஒளிர்ந்த செஞ்சுடரும்
அணைந்திட, தேவமகனாய் நடமாடிய
புண்ணிய புருஷரும் மறைந்தாரே!

இரவும் பகலும் இன ஒற்றுமைக்காய்ப் பாடிய
புள்ளிக்குயிலும் ஊமையானது-போதைபொருள்
ஒழிப்பிற்காய் விழித்திருந்த காவலனும்
கண்ணயர்ந்த கருநாளிது.

அதர்மத்தை எதிர்த்த இடியும் ஓய்ந்ததோ!
-உறங்கிகிடந்த மனச்சாட்சிகளை உயிர்ப்பித்த-மாமனிதரும்
பணிமுடிந்ததென்று துயில் கொண்டாரோ?

புத்த தர்மமென்னும் நெம்புகோலால்-அராஜக
அரசின் சிம்மாசனத்தை புரட்டிப்போட முயற்சித்த
புதுமை ஆக்கிமிடிஸீம் நீரே-இன ஒற்றுமையின்
அகிம்சை புரட்சியாளனும் நீங்களே



அரியணையும் அமைச்சுப் பதவிகளும் ஆட்டம் கண்டிட
சிங்கமெனக் கர்ச்சித்த சீவர ஆடைத் துறவியே
உண்மையும், அஹிம்சையுமே உங்கள் ஆயுதம்
தம்ம உபதேசமே-என்றும் உம் கீதா உபதேசம்

சிங்கமாய்க் கர்ச்சித்தும் சீவர ஆடையிலும்
வாளேந்தாத சிங்கம் நீங்கள்
சிங்கள பௌத்தனாய் இருந்தும்-இனவாத
நெருப்பை கக்காத ஞானபுத்தனும் நீங்கள்

ஏழை எளியவர்க்கு உம் வாழ்வு
என்றுமே ஓர் ஆசிர்வாதம்-நெஞ்சில்
செருக்குற்ற அரசியல்வாதிகளுக்கோ
அது புதிய தம்ம பாடம்



ஐயா!-அமைதியில் நீ உறங்கிட
அழுகையில் எம் மனம் கலங்கிட
தொழுதே உன் திருவுடலை வணங்கி
தூயவனே விடை கொடுக்கின்றோம்.
ஆயன் இல்லா ஆடுகள் நாம்

வீசிய தென்றலில் உதிர்ந்த
வெள்ளரசு மரத்தின் பழுத்த இலையொன்று
முக்தியடைந்த நிலையில் காற்றில் ஆடி
கவிதைபாடி பயணிக்கும் பரவசம்
நிர்வாண நிலையின் ஆனந்தமோ?

அத்வைத பேரழகும் அமைதியில் உறங்கிட
புத்தபெருமானும் புண்ணிய சீலரை தம்மிடம்
அழைத்திட, பிறவித் தளை அறுத்தவர்க்கு
இனி பிறப்பேது துக்கமேது

***சப்பே தத்தா பவங்க துதி தத்தா***

**புத்தம் சரணம் கச்சாமி**
**தம்மம் சரணம் கச்சாமி**
**சங்கம் சரணம் கச்சாமி**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# மைக்கல் ஆஞ்சலோ

---

படைத்தவனைப் பெரும் கலைப்படைப்பாக்கி
அழியாத ஓவியங்களாய், அற்புதச் சிற்பங்களாய்
வரைந்தும், வடித்த மா கலைஞன்
படைப்பாளி மைக்கல் ஆஞ்சலோ





சித்திரங்கள் பேசிட, சிற்பங்களும்
வாழும் மனிதர்களாய் மாறிட, நூற்றாண்டு
பல சென்றும், ஆலயங்களில் வாழும்
இறைவனோடு-இன்றும் "தெய்வீகன்"
எனப் பெயர் சூடி வாழும் மா மனிதன்

கவிஞனாய், ஓவியனாய், சிற்பியாய், கட்டிடக் கலைஞனாய்
காலத்தால் அழியாத படைப்புகளால்
வாழும்போதே தெய்வீக புருஷன்
(Il Divino-"the divine one")
எனப் புகழ்பெற்ற படைப்பாளி.



பாலூட்டிய தாதியும், பரவசமூட்டிடக்
கை நின்று கலைவண்ணம் காட்டிய
சுத்தியலும், உளியும்
என்னைக் கலைஞனாய் மாற்றின.

The Madonna of the stairs (1490-92)
Pieta (1499), David (1504)
Moses (1515)
Sistine Chapel Ceiling Paintings (1512)
The last judgment (1541)
**சிற்பக்கலைக்கே அற்புதம்-**
ஆலயத்தில் தீட்டிய வண்ணச் சித்திரங்களோ
ஓவியக் கலையின் உன்னதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-05-2023

# அன்னை தெரேஸா





கொல்கொத்தா தெருக்களில் நாறி மணக்கும் பிணங்களை
நகரசபை வண்டிகள் குப்பைகளாய் அள்ளிச் செல்ல,
கூடியழும் சொந்தமெனக் கூட்டமாய்க் காகங்கள் கரையும்

காணும் காட்சி நாளும் நடக்கும் ஒன்றென -ஒதுங்கி
மூக்கைப் பொத்தி நடையை கட்டும் நகரவாசிகள்
சொறி நாய்களாய் தெருக்களில் ஏழைகளின் சாவுகள்

இரக்க மழையின்றி காயும் மனம்-வறுமையும்-
தொழு நோயும் வருத்தும் வாழ்வோ எரிநரகான சாபம்-
மரணமோ மாறாத வரம்- புலம்பும் ஏழை மனம்

எச்சில் இலைக்கும்-கந்தல் துணிக்கும்
குப்பைத் தொட்டியில் நாளும் போராட்டம்
நடைபாதையும்-மரநிழலும்-வாழ்வதற்கும்-
சாவதற்குமான தொழுநோயாளர் வாழிடம்



அழுகி நாறும் தேகம்-மருந்தின்றி வாட, பசிப்பிணி தீய்க்கும்
வயிறு பிடி சோறின்றிக் கதற, கடந்த சென்ற மனிதர்
எல்லாம் விரைந்து சென்றார், கல் மனம் படைத்த,
குரு லேவியர்போல், விலகிச் சென்றார்.

நாதியற்று நாறும் மானுடத்துக்குச் நாய்களும், பூனைகளும்
சொந்தம் சொல்லும், போகிப் பண்டிகையில் எரித்திடும்
ஆடைகளும், மணந்திடும் பொங்கலும்-ஏழைகளுக்கு
கிட்டாத கோயில் பிரசாதமாகும்.



நாளும் செத்துப் பிழைக்கும் வாழ்வில்
சுகம் என்பது பகல் கனவாகும்
மரணம் என்பதோ சுதந்திரமாகும்

ஈகையும் இரக்கமும், வேதங்களில் உறங்கிட
அன்பையும் பகிர்தலையும் நெஞ்சம் மறந்திட-
மனிதனைத் தேடி ஏழையின் வடிவில்
இன்றும் அலையும் இறைவன்

குப்பைகளைக் கோழிகளாய்க் கிளறி சேரி வாசிகள்
வயிறு பிழைக்கும், சுத்தமும் சுகாதாரமும் கூடவே
கல்வியும் தீண்டாத ஜாதிக்கு எட்டாத நிலவாகும்

கண்ணிரிக் கடலில் தத்தளிக்கும் ஏழைகளைக்
கரையேற்ற முடியாத தெய்வங்கள்-
கர்பக்கிருகத்துள் பொன்னாபரணங்களில் மின்னும்



தெய்வங்களுக்குதான் எத்தனை கைகள்? எத்தனை
ஆயுதங்கள, திருடர் பயம், தெய்வங்களுக்கும் உண்டு போலும்
தெருவில் இரக்கும் ஏழை மனம் எண்ணி வாடும்.



சிலை திருடி விற்றவர் செல்வராயிட
கோயில் கட்டி கும்பிட்டவர் தலைவர்களாயிட
உயர் ஜாதியோடு சோரம் போன தெய்வங்களை
கல்லாய் சபித்த “கடவுள்” யாரோ?

கல்லான உள்ளங்களுக்குச் சிலைகளும் தெய்வங்கள்
கண்ணெதிர துன்புறும் மனிதங்களோ
கர்ம வினையான தீண்டாமையின் சாபங்கள்

பட்டினியால் ஏழைகள் வாடப், படையல்கள் குவிந்து
பாற்குடங்கள் கவிழ்ந்து பாலாறு ஓட, புரியாத மொழியில்
மந்திரங்கள் முழங்கிட அரங்கேறும் திருவிழாக்கள்



கோடிகளால் நிரம்பிடும் உண்டியல்களும்
தங்க-வைர ஆபரணங்கள் குவிந்த நிலவறைகளும்
“தெய்வங்கள்” “சாமிகள்” வாழும் கோயில்கள்,
பசியும், நோயும் வாழும் சேரி தீண்டாதான் குடியிருப்புகள்

இறைவனும் முதலாளி வர்க்கமாய் உயர்ந்திட, தொழிலாளி வர்க்கம்
சூத்திர சாதியாய் நாறிட,மேல் ஜாதி எழுதி வைத்த புராணப்பொய்களில்
“சாதி அடக்குமுறை” மனுஸ்மிருதியானது-நூற்றாண்டுகளாய்
மகாத்மாக்களாலும் திருத்தி எழுதப்படாத அநீதி தீர்ப்பானது.



அதிகார முதலாளிவர்க்கம்
உழைக்கும் தொழிலாளிவர்க்கத்திற்கு பூட்டிய
‘இரும்பு நுகமோ’ சாதியம்?

மனுவின் ஜாதியத் தீயில் நாளும் தீயும் தீண்டாதன் ஜாதி
வறுமை காட்டுக்குள், தொழுநோய்த் தீட்டுக்குள் நாறி மணந்து
மரணவாசலில் நிற்கும் தெருவாசிகளோ பறை நாய்களான ஜாதி.

சுமைதாங்கியில்லாத வாழ்வில், உருவழியும் உயிர்கூட
உடற் கூட்டில் இமயமாய் கனக்கும், பசி தீய்க்கும் வயிற்றை,
நோய் உண்ணும் உடலை-நாறும் சதைக்கோளம் எனச்
சமூகம் வெறுத்தொதுக்கிட, கண்ணீர் பெருக்கெடுக்கும்
இதயம் காணாத இறைவனைக் கூவிக் கதறும்

மூப்பு, பிணியு, பசி ஒன்றாய் வாட்டிட-
எரியும் மெழுகாய்த் தேகம் உருகி அழுகிட
காட்சியளித்த இயேசுவின் வாடிய முகம்
அன்னையின் பயணத்தை மாற்றிய அதிசயம்






"வெற்றிக்காக அல்ல-விசுவாச வாழ்விற்கே"
என் அழைத்தல் என, இறை அழைப்பை ஏற்று
சிறு தொண்டனாய் தன் வாழ்வையும்-தாயே
ஏழைத்-தெருவாசிகளுக்கு நீ அர்ப்பணித்தாயே

நான் சமூக சேவகியல்ல-இறைமகன் அன்பினை
ஏழைகளோடு பகிர்ந்திட-இறைவன் தெரிந்த கருவி
என்றாய், என் வாழ்வின் மையம்-என்றும் இயேசு
என வாழ்வால் சாட்சியம் பகிர்ந்தாய்.



உனக்கென எதையும் உடமையாக்காமல்
உன் வழியாய் இறைமகன் அன்பையும்
ஏழைகளுக்குப் பொது உடமையாக்கினாய்.

அன்புமழையின்றி வாடிக் கிடந்த ஏழைகளை, தோளில் சுமந்து
வாழ்வு கொடுத்த தெய்வத்தாய் நீ, வங்கப் புரட்சியின்போது
சொந்தங்கள் ஒதுக்கிய மானபங்கத்துக்காளான மங்கையருக்கு
தாயாய் மாறி, சேயாய் ஏற்று வாழ்வு கொடுத்த தெய்வம் நீ






வல்லாங்காள் விழைந்த களைகளெனத்- தாய்குலம்
ஒதுக்கிய குழந்தைகளை-தத்தெடுத்த தெய்வத்தாய் நீ.
எல்லோரும் இறைவன் குழந்தைகளே முழங்கிய
புதுமைப் பெண்ணும் நீ

சேரிக் குழந்தைகளுக்கு-எட்டாக் கனியான கல்வியையும்
காலடிக்கு எடுத்தச் சென்று சுவைத்திட கொடுத்த
வள்ளல் நீ, நாறி மணந்த சேரிகளுக்குள்
சுத்தம் வாழ சுகந்தம் வீசிய தென்றல் நீ.

ஏழைச் சேரியில் கூடுகட்டிய வண்ணமயில் நீ
இருண்ட இரவுகள் விடிந்திட-ஏழைகளுக்காய்
கூவிய-தேவனின் வெள்ளைச் சேவல் நீ.

ஜாதித்தீயில் நாளும் வெந்து, வறுமை நரகில் வாடி
மூப்பும் பிணியும் வாட்டிட, தெருநாய்களாய்ச்
சாகும் வாழ்வில், இறைவன் பொழிந்த அன்பு மழை நீ

உன் புன்னகையால் ஏழை முகங்களிலும்
புன்னகைப் பூக்கள்-உன் தோழமையால்
இருண்ட நெஞ்சிலும் புதிய விடியல்கள்.

ஏழைகளுக்காய் இரந்துவாழும் ஏழையானாய்
உன் மீது காறி உமிழ்ந்த எச்சிலையும் உனக்கென ஏற்று
உமிழ்ந்தவனிடமும் ஏழைகளுக்காய் இரந்த நின்றே
இரும்பு மனமும் இளகிடச் செய்தாய்.






இன்றும் உன் வீட்டு வாயிலில். பகிர்ந்து வாழ்தலின்
புனிதத்தை புரிந்து- உள்ளதைப் பகிர்ந்திடக் கூடும்
கூட்டம், உன் அன்பு செய்த அதிசயம்.

பிறந்த மண்ணைத் துறந்து-வாழ்ந்த மண்ணை வளமாக்கிய
தேவ கங்கையே-அன்று சேரியை நோக்கிய உன் சின்னக்
காலடித்தடங்கள், இன்று பல நாடுகளில் உள்ள ஏழைகளுக்கும்,
தெருவாசிகளுக்கும் இறை ஆசிராய் மாறிய அதிசயம்தான் என்னே!

உன் சின்ன உருவத்துள் பெரிய இதயம் வைத்து
உன் அன்பைச் சுவைத்திட இறைவனும்-
துன்புறும் மனிதனாய்க் காட்சி கொடுத்தாரோ?

மயங்காத உன்னிதயம்-ஏழைகளின் புன்சிரிப்பில் மயங்கியதென்ன?
தீண்டாமை, வறுமை, தொழுநோயை எதிர்த்துப் போராடும்
ஏழைகள் வாழ்வு புதிய குருஷேத்திரமாக உன் அர்ப்பண சேவை
அன்பின் புதிய கீதையான அதிசயம்தான் என்னே!






வசைமொழிக்கும் வாடாத உன் செவிகள்
எச்சில் துாறலிலும் புன்னகை மாறாத உன் பூமுகம்
ஏழைகளை தேடியலைந்து சோராத உன் கால்கள்
இரந்தும் கொடாத மனங்களை -அன்பினால் இளகவைத்த
பொன் மனம்-அற்புதத்திலும், அற்புதம் அம்மா

உழைத்து தேய்ந்து பொன்னாய் ஒளிரும் தேஜஸ்-
ஏழைகளில் துன்புறும் இயேசுவைக்கண்டு
நீ பூண்ட பணிவாழ்வோ பெருந் தவம்
எல்லா புகழும் இறைவனுக்கே என்ற செபம்-
அம்மா இறைவன் உமக்களித்த பெருவரம்



உன் புரட்சிப் பயணத்தில் பூக்களைவிட முட்களதிகம்
போற்றுதலை விட துாற்றுதல் அதிகம்-
இன்றோ, புகழாரங்களும்-விருதுகளும்
நோபல் பரிசும்-புனிதை பட்டமும்-



பரிசுகளும், வாழ்த்தொலிகளும் உன் சேவைக்கு
ஈடாகாது-மடிந்தும், மடியாது தொடரும்
உன் சபையின் சேவைக்கு புகழாரமாகாது

அவதார புருஷர்களும், தீர்த்தங்கரர்களும்-புத்தர்களும்,
கபீர்களும்-பாபாக்களும், பரமஹம்ஸர்களும்-பரமாத்மாக்களும்
மகரிஷிகளும், மகாத்மாக்களும் உலாவிய பூமியில்
பகவத் கீதையும்-தம்ம பதமும் பாடிடும் தேவபூமியில்-
உன் அர்ப்பண வாழ்வு -வாழும் கிறிஸ்துவிற்கு சாட்சியமே
சத்திய தரிசனமே, அன்பின் பேரதிசயமே

***அன்பே சிவம் என்பதற்கு உன் வாழ்வே சாட்சி***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே உன்தன் மாட்சி***



*I am called not to be successful- but to be faithful.*
*Mother Teresa*




**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-04-10-2023

# ஓ!என் பாரதத் தாயே

---

மனுதர்மம் மானுடத்தை சாதியத்தால் பிரிக்க
மதவாத சாம்ராஜ்யத்தின் முடி சூடா மன்னர்களாய்-
உயர் ஜாதி இந்துக்கள், மண்டியிட்ட சூத்திரனாய்
இன்றும் தாழ்த்தப்பட்ட தலித் மக்கள்.

உயிர்களை வதைத்து, நகரங்களை முடக்கி கொரோனா அச்சுறுத்த
புகலிடமின்றி, உயிர் பிழைக்க் கிராமங்கள் நோக்கிப்
பல்லாயிரம் தலித் மக்களின் பாதயாத்திரை, காணொளி பார்த்து
கண்ணாடிபோல் இதயம் நொருங்கிட, கண்களில் நீர்த்திரை





வர்த்தகச் சந்தையின் மலிவுக் கூலிகய், நித்தமும்
ஊரைச் சுத்தம் செய்த சூத்திரஜாதிகள்-நடைபாதையில்
கூடுகட்டிய ஏழைகள்-கொரோனா அச்சுறுத்த
சேரி நோக்கி விரட்டப்பட்ட தேசாந்தரிகள்

சந்திராயனைத் திங்களுக்கு விட்ட தேசம்
பரிதவிக்கும் ஏழைகளை -கட்டாய
பாதயாத்திரை செய்யவிட்ட நாசம்

கழுதைகளாய் உடைமை சுமந்து பல மைல் நடந்து
தெருவில் உறங்கி- சேரி நாடி தீண்டாதன் யாத்திரை
தாண்டி யாத்திரை செய்த மகாத்மாவிற்கு
நேராத சத்திய சோதனை.

நாய்களுக்கு கூண்டுகளும், பசுக்களுக்கு தொழுவங்களுமிருக்க
தாழ்ந்த ஜாதி-மலிவுக் கூலியின் பரிதாப பாதயாத்திரை
தீண்டாமையின் புதிய சூத்திரம்-மனிதநேயமில்லா
இந்து மதவாதத்தின் தரித்திரம்



மடிந்தவரை புதைத்து, சோகத்தை மறைத்து
மரங்களில் பரணமைத்து- காக்கை குருவிகளாய்-மானுடம்
தம்மைத்தாமே தனிமைப்படுத்திக் கொண்டு
சேரியை காக்கும் சேவை, காந்தியம் காணாத புதுமை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-06-2023

# தந்தை பெரியார்





சாதியத்தால் திராவிட சமூகத்தைத் தண்டித்து நிந்திக்கும்
பார்பனிய விக்கிரகங்களைச் -சாகும்போது
தந்தை பெரியார் கூவியழைக்கவில்லை
சமஸ்கிருதத்தை வேதமொழியாக்கிச்- சாகாத
முத்தமிழை நீஷமொழியென்றே-நீசர்களின்
கடவுளைக் கூவியழைக்கவில்லை

மானுட மீட்சிக்காய் போலி மதம் துறந்த மாமனிதன்
உண்மைக்குச் சாட்சியாய், இன்பத் தமிழுக்கு தொண்டனாய்
வாழ்ந்து மூடநம்பிக்கைகளை சாடி நின்ற தானைத் தலைவன்

இராம, கிருஷ்ணர் விக்கிரகங்களைச் செருப்பால் அடித்து
ஊர்வலம் நடத்தி, தூங்கிக் கிடக்கும் சமூகம் விழித்து எழ,
ஒடுக்கப்பட்ட இனம், உரிமைக்காய் குரல் கொடுக்க
சாகும் வரைக்கும்-க்ஷத்திரியனாய் பகுத்தறிவுக் குருஷேத்திரத்தில்
தனித்துப் போராடி சத்தியத்திற்கு குரல் கொடுத்த மாபுருஷன்



மாளும்போது- உண்மைக்காய் குரல் கொடுத்தவன்
உண்மையின் இறைவனை உரிமையோடு கூவியழைத்தான்.
பொய்மையின் முகமூடிகள் கிழிந்திட, போலித் தெய்வங்களை
அண்ணகர் என்றும் அழகிய கற்சிலைகள் என்றும் உணர்த்திட
தானும் இறைமகன் என்றே கர்ச்சனை செய்தான்.

ஓ மதவாதிகளே சத்தியமே தெய்வம்-
தொழுது பணிவதெல்லாம் கற்சிலைகளே!
மானுடத்தை இழிவுபடுத்தும் வேதமெல்லாம்
சாஸ்திரிய குப்பைகளே, வரட்டுப் புராணங்களே!




அன்பைத் தவமாக, சத்தியமே பாதையாக வாழ்ந்தால்
அறிவாய் இறைவனை உன்னுள்ளே-அது நீயே
இறை மக்கள் நாமே, இறையரசு நம்முள்ளே
தூய் மனத்தவருக்கே சத்திய தரிசனம்




பெருமான் புத்தரும் , இயேசு கிறிஸ்துவும்
இருப்பு எனும் கடலில் எழுந்த
உள்ளுணர்வின் உன்னத விழிப்பு நிலைகளே
அறிந்தால் மதம் கடந்த மெய் ஞானி நீ

புண்ணிய நதிகள் என்று ஏதுமில்லை- அங்கும் ஓடுவது நீரே-
ஞான ஸ்நானம் என்று ஏதுமில்லை- விழிப்புணர்வே ஞானம்
மீட்பரென யாருமில்லை- நீயே உனக்கு மீட்பன்
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
உனக்கு நீயே ஒளியாகிப் போ

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

Pax Ravichandra-08-05-23

# சத்தியகிரகி

---





தென்னாபிரிக்க வெள்ளையரின் தீண்டாமைத் கனல்
கறுப்பன் கரம் சந் காந்தியைச் சுட்டுத் தகித்திட
நிறவெறியின் கொடுமை கண்டு கொதித்த கறுப்பனின் சிவப்பு இரத்தம்
குருதி சிந்தாமல் தொடங்கிய அகிம்சைப் போராட்டம்-வெள்ளையர்
கறுப்பு மனச்சாட்சிகளைத் தட்டி எழுப்பிட
இரட்சகராய் காந்தியின் புரட்சிமிகு ஆர்ப்பாட்டம்

வெற்றி வீரனாய் நாடு திரும்பி, பாரத மாதாவின் விடுதலைக்காய்
பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை அகிம்சைப் போராட்டங்களால் அசைத்திட
சத்திய கிரகமும், உண்ணா விரதமும் உலகை வியப்பிழாழ்த்திய பிரம்மாஸ்திரம்
கரம் சந்காந்தி, மகாத்மாவாய் உருமாறிட, அகிம்சைப்போராட்டம்,
பாரத விடுதலைக்கான புதிய குருஷேத்திரம்.




சொந்தமண்ணில்-இழிந்த பிறவிகளாய்-தலித், தீண்டாதவன்
என்று பெயர் சூடி- நூற்றாண்டுகளாய் தீண்டாமைக் கொடுமைக்கு
ஆளான நான்காம் வர்ணம் கடந்த ஜாதி, சனாதன தர்மத்தின்
இருண்ட நீதி மகாத்மாவின் கண்ணில் படாத அநீதி?

துடைப்பத்தை இடுப்பில் கட்டி, கலயத்தை தலையில் கொழுவி-
பாதையில் தன் வருகையை-பரிதாபமாய் குரல் கொடுத்து அறிவித்து
அஞ்சி ஒதுங்கி நடகும் ஜாதி, எருமைகள் குளிக்கவும்,
குடிக்கவுமான உயர் ஜாதியினரின் குளத்தில்-நீர் கொள்ளவோ
குளிக்கவோ உரிமையில்லாத நீதி, ஆலய தரிசனத்திற்கும்
தகுதியில்லாத வாழ்வே சாபமான நியதி

மீட்பனின்றிப், போராட வழியுமின்றி கூனிய முதுகும்,
குறுகிய சாதியச் சிறையும் ஆயுள் தண்டனையாக,
உழைப்பிற்கேற்ற ஊதியம் கொடுத்தால் ஏழையும் செல்வனாகலாம்
தனத்தால் தலித்தை ஏழையாக்கிய இம்சையை கண்டும் காணாத
காந்தியம், தானத்தால் பிழைத்த பார்பனச் சாதியம்



பாரத அடிமைத்தனமும் கண்டு குமுறிய உள்ளத்திற்கு
சாதிய அடிமைத்தனம் கண்ணில் படாத அவலம்தான் என்னே?
சாதி ஒழிப்பிற்காய் போராடாத அகிம்சா தர்மம், வேஷமோ?
வைசிய மகாத்மாவிற்கும் நீதியான சாதியம்,
அடிமைத்தனத்தை நியாயப்படுத்தும் வேதமோ?

வேதம் கேட்ட காதுகளில் கொதிக்கும் ஈயமும்
வேதத்தை உச்சரித்த கீழ் ஜாதி நா துண்டாடப்படும்
என்பதும்-கொண்டாடப்படும் வருணாச்சிரம தர்ம நீதி

தீண்டாத ஜாதிக்கு- ஹரிஜனன் என்னும் திருநாமம் சூட்டி-
மேல் துண்டை துறந்த அரை நிர்வாணப் பக்கிரியோ மகாத்மா
சாதியம் மேலாடையாக-மேல் துண்டும், செருப்புமின்றி
இந்தியன் என்ற செருக்குமின்றி, இந்து என்ற மத நாமம் இன்றி-
தீண்டாமைக்கு பலியாகும் தலித்துக்களோ பாவாத்மா?






இம்சை-மறைக்கப்பட்ட, மறுக்கப்பட்ட, அகிம்சா
தர்மத்தின் மறுபக்கமோ? சனாதன தர்மத்திற்கு
காந்தியம் வீசிடும் சாமரமோ?

***தண்டி யாத்திரை*** செய்த உப்புச் சத்தியகிரகி-சாதியம் ஒழிந்திட
சாதித்தது ஏதுமில்லை, பாபசாகிப் அம்பேத்காரின் நீருக்கும்,
ஆலய தரிசனத்திற்குமான **மகக் சத்தியகிரகம்**-சாதியத்தின்
வன்முறைக்குப் பலியானதில் ஆச்சரியம் ஏதுமில்லை

தன் ஜாதிக்காய் போராடும் நீதிமானை-உண்ணா விரதத்தால்
ஒடுக்கிய காந்தி , சாணக்கியனை மிஞ்சிய இராஜதந்திரி
சுந்தர பாரதமோ வெள்ளையரிடம் அடிமை
சூத்திர இனமோ உயர் சாதியிடம் அடிமை



இராட்டினம் சுற்றி நூற்ற கதர், ஏழை தலித்துக்கு
மேலாடை நெய்யவில்லை வெள்ளையர் ஆடைகளைக்
கொழுத்திய அகிம்சை-தீண்டாத ஜாதிக்கு மாற்றாடை
வழங்க மனம் இரங்கவில்லை, சாதியம் ஒழியவில்லை

இறைவன் தன் சாயலாய் மனிதனைப் படைத்தார் விவிலியம் இயம்பிட,
பிரம்மா வாயிலிருந்து- பிராமணன், கரங்களிலிருந்து-க்ஷத்திரியன்,
தொடைகளிலிருந்து-வைசியன் பாதங்களிலிருந்து- சூத்திரன் பிறந்தான்
சனாதன தர்மம் இயம்பிட, நாரதன் படைப்பா? சுக்கிலத்தின் விதைப்பா?

மகாத்மா காந்தி- அம்பேத்கார் படங்களாயத் தொங்கிட-இன்றும்
சமவுரிமைக்காய்த் தொடரும் தலித்துக்களின் போராட்டம்
இந்திய விடுதலையும்-அரசியலமைப்பும் இருவரின் உழைப்பானது,
தீண்டாமை வேதம் வகுத்த (அ)நீதியானது.



சாதியம் ஒழியப்-போராடாத வைசிய அகிம்சாவாதி
***பண நோட்டுகளில் படமாகிப் போயிட***-செல்வமும்
***உயர்*** ஜாதிக்கே என்றாகிட -காந்தியம் அரசியலானது
தீண்டாமை சிலுவையும், அடிமை நுகமுமானது.

சாதிய நரகத்திலிருந்தும், காந்திய பொய்மையிலிருந்தும்
தன் ஜாதியை காக்க பௌத்தத்தை தழுவிய அம்பேத்காரின்
புனித புரட்சி, புத்த பெருமானின் சமதர்ம நீதியின் பேரெழுச்சி

பஞ்ச சீலங்கள், தர்மசக்கரத்தின் கால்களாக
சனாதன தர்மமோ சாதிய சகதியில் சிக்கிய சகடமாக
காந்தியத்திலும் சாதியக்கறை, இம்சை ஒழிக்கப் போராடாத
அகிம்சையும் அண்ணகனான அவல நிலை

தாழ்ந்த ஜாதிக்கு பூணூல் அணிவித்து வேதம் ஓதி-
சாதியம் ஒழிய, சாதனை படைத்த புரட்சிக் கவிஞன் பாரதியோ
மனித நேயன், சாதியம் கடந்த சமதர்ம வேதம்
படைத்த புதிய பிரம்ம தேவன்






சொந்த இனத்தை சாதியத்தால் அடிமைப்படுத்தும்
மதமும்-ஜாதியும் மனம் மாறாதவரை
இந்திய சுதந்திரம் என்பது வெறும் கற்பனையே

ஏழைகள் குடிசையில் வாழ- ஏழுமலையான் கோடிகளில் புரள
இராமருக்கு கோயில் தேவையில்லை, ஏழைகளில்
இராமனை காண எந்த வேதமும் தேவையில்லை
சமதர்மமே சத்தியம், சத்தியம் அறிந்தவனே சத்தியகிரகி

பொற்சிலையும், கற்சிலையும் கடவுளாக,
சாதியமனங்கள் வேதியரும், பக்தருமாக,
சமதர்மம் இல்லாத சனாதன தர்மம் ?



சாதியவேள்வியில் ஆகுதியாய் நித்தம் ஹரிஜன்.
பிரம்ம சூத்திரம் வகுத்த யோகிகள் உலகில்
அன்பின் சூத்திரம் அறியாத ஆதி சங்கரர்

கல்லில் கடவுளை வடித்து தொழுதல் வழிபாடல்ல
வாழும் இறைவனை-ஏழையில் கண்டு வாழவைத்தலே
மதம் கடந்த அன்பின் வழிபாடு, புதிய ஏற்பாடு




காந்தியின் இராட்டினம்-ஹரிஜனங்களுக்கு
மேலாடை நெய்வில்லை- சத்திய கிரகியின்
அறவழிப்போராட்டம்-தீண்டாமையைச்
சாய்க்க குரல் கொடுக்கவில்லை

***வெள்ளையன் கல்வியால் உயர்ந்த மாமனிதர்கள்
சாதியத்தால் வேறுபட்டும் இந்தியன் என்ற
உணர்வால் ஒன்று பட்ட மகா புருஷர்கள்***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-03-10-2023*

# சோக்கரடீஸின் மரண யாத்திரை

அந்தி மயங்கும் வேளை, முந்தி வரும் மரணத்தை
அச்சமின்றி வரவேற்க-முறுவலோடு நீராடி வந்த சோக்கரடிஸை
வாழத்திய சிறையதிகாரி, நஞ்சருந்தி மடியும் வேளையிலும்
நெஞ்சார என்னைப் புரிந்தவர் நீங்கள் ஒருவரே





அஞ்சா நெஞ்சமும், அறிவுடமையும், நல்மனதும்
பெரியவரே உங்களுக்கு- மற்றவரோ அஞ்சி
நஞ்சான வார்த்தைகளால் கடமையைச் செய்யும்-
என் நெஞ்சைப் புண்படச் செய்தார்

கலங்கிய என நெஞ்சம் உங்களுக்காய் அழுகின்றது
சிந்தனையாளரை மதிக்கத் தெரியாத வஞ்சகம்
நஞ்சருந்தி மடியும் மரணத்தை பரிசளித்தை எண்ணி
இதயம் அனலில் விழுந்த புழுவாயத் துடிக்கின்றது.

நெஞ்சம் நெகிழ்ந்து துடிக்க-நீர் ஏந்தி
விழிகள் சிவந்து கலங்க
அஞ்சா நெஞ்சத்துப் பேரறிஞரை-சிறை
அதிகாரியும் அன்போடு வாழ்த்திச் சென்றார்

நன்றி கூறி அதிகாரியைப் போற்றியவர், எத்துனை நல்ல மனிதர்
சிறையிருந்த நாட்கள் எல்லாம் என் சிந்தனைக்கு விருந்தானவர்,
கருணையோடு என்னைக் கவனித்தவர் எனக்காய் அழுகின்றார்
என்றால், என்மேல் எத்துனை பிரியம் பாருங்கள்

நண்பர்களே, நஞ்சை தயார் செய்திடக் கூறுங்கள்
நாம் பிரியும் நேரம் வந்துவிட்டது-அன்புறவுகளை
பிரிவதைப்போல் துன்பம் வேறு ஏதுமில்லை
ஏற்பது. மறுப்பது கடந்த இயற்கை வகுத்த நியதி மரணம்

ஆன்மா அழியாதது-மரணத்தை அறியாதது
அறிந்தவன் நான் மரணத்திற்கு அஞ்சவில்லை,
மலைகளுக்குள் கதிரன்-மறையவில்லை
மாலைப்பொழுதுதான் இப்போது

ஏனோ மரணத்தை தழுவ இத்தனைஅவசரம்.
மற்றவர்களோ-உண்டு குடித்து விருந்தாடி
இறுதி இரவை கொண்டாடி-நள்ளிரவில்
நஞ்சருந்திப் போதையில் மடிவார்

எம்மை பிரியும் அவசரம் ஏனோ? வாழ்நாளெல்லாம்
எம் சிந்தைக்கு விருந்தளித்த உம்மைப் பிரிவது
எத்துனை துன்பம்-நீரில்லா உலகு ,எமக்கோ
கதிரில்லா வானம், வாழ்வோ வேரறுந்த விருட்சம்



தன்னை புரிந்த நண்பர்களை வாழ்த்தியவர், இன்னம்
சில மணி நேரம் நீடிக்கும் வாழ்வு, மூடருக்கோ ஆசீர்வாதம்
வாஞ்சையோடு மரணத்தை தழுவிடும் எனக்கு
வாழ்வை நீடிப்பதில் என்ன லாபம்?

மடியும் கொடிய காட்சியைக் கண்டு கலங்கி, அழக்கூடாதென்றே
மங்கையரை அனுப்பிவிட்டேன் -மரணத்தை ஏற்கத் துணிவும்,
அமைதியான மனமும் வேண்டும், பொறுமையோடு, பொறுப்போடு
நடந்து கொள்ளுங்கள், அழுகை, ஒப்பாரி ஏதும் வேண்டாம்.

நஞ்சைத் தயாரித்தவர் நாழிகை பல கழித்தே, நஞ்சை அளித்து
நெஞ்சம் நெகிழ்ந்து கூறினார் நண்பரே அருந்தியவுடன்
உலாவுங்கள்,கால்கள் மரத்துப்போகும் உணர்வு தெரிந்தவுடன்
படுத்துக்கொள்ளுங்கள் எல்லாம் முடிந்துவிடும்.

நஞ்சில்-கொஞ்சத்தை தெய்வங்களுக்கு
காணிக்கையாக்கிட தடை ஏதும் உண்டோ? வினவிட
குறித்த அளவே தயாரித்தோம் விடையானது.



நன்றி சொல்ல வேண்டும் தெய்வங்களுக்கு
நான் செல்லும் மறுவுலகு நல்லதாய் அமையவேண்டும்-
இதுவே என் ஜெபம், அதுவும் எனக்கு அருளப்படும்

நெஞ்சில் சிறிதும் கலக்கமின்றி, நஞ்சைப் பருகியவர் நடை பயில
நண்பர்கள் விழிகளில் கண்ணீர் பெருகிட-துக்கம் தாங்காது
கிரைட்டோ ஓடி மறைய, அப்பலோடொறிஸ் விம்மியழ
பிளேட்டோ முகத்தை மூடி அழுதார்

அழியா உலகிற்கு நான் செல்கிறேன்-அழுவதனால்
மரணத்தை தடுக்கமுடியாது, மரணம் மறு உலகின்
வாயில், கால்கள் மரத்திட-மெல்லப்
படுக்கையில் சாய்ந்தார்-சாக்கரடிஸ்

காவலர், கால்களை கிள்ளிப் பரிசோதித்திட-விறைத்த கால்கள்
மரத்துக் குளிர்ந்திட, குளிரும் உணர்வு இதயத்தை நெருங்கிட
நண்பரே மரணம் நிச்சயம்- சொன்னவர்
குரலோ சோகத்தின் சாட்சியம்

கால்களைத் தாண்டி காலனின் பயணம் இடுப்பைத் தொட-
நினைவு விழித்து-கிரைட்டோ அஸ்கிளிபியஸ் தெய்வத்திற்கு-
சேவல் ஒன்றை காணிக்கையாக்கிட -மறந்துவிடாதே, மௌனித்த
அறிஞன் மொழிகள், நிலைக்குத்தி நின்ற நீலவிழிகள்

இமைக்காத விழிகளையும்,
சிந்தனை முத்துக்களை உதிர்க்கும்
மூடாத செவ்வாயையும் மூடி- தோழரே
என விம்மினார் நண்பர் கிரைட்டோ

உண்மையின் தரிசனமாய் வாழ்ந்த உயர்ந்த மனிதன்-
தன்னிலை தாளாமை- அந்நிலை தாளும்கால்
மண்ணில் உயிர் வாழாமை மானம் என்றே
மரணத்தை ஏற்ற சிந்தனையாளன்.

தண்டனையை உடன் நிறைவேற்ற-திருவிழா தடையாக
தப்பி ஓடிட நண்பர்களும் துணை வர,-எதிரிகளும்
கண்டும் காணாதவராய் உதவிட முன்வர-மறுத்து
மானமே பெரிதென மரணத்தை ஏற்ற மாமனிதன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-08-2023

# சோக்கரடீஸின் முழக்கம்



பிறப்பு, இறப்பு இயற்கை வகுத்த நியதி-நடுவர்களே
எனக்கு வழங்கிய மரணத் தீர்ப்போ அநீதி
உண்மையை ஆய்ந்தறியாமல்
பொய்மை வழங்கிய அநீதியின் ஆர்ப்பரிப்பு




மரணத்திற்கு அஞ்சாத முதியவன்-அஞ்சுவதெல்லாம்
சத்தியம் தோற்கக்கூடாது என்பதே
***ஒன்றுமறியேன் என்பதே நானறிந்த உண்மை***

இன்றில்லையேல் நாளை என் மரணம்.
என் மரணம் சத்தியத்திற்கு மணியாரமே,
பொய்மையின் புகழாரங்கள்-தீயோர்
மார்பை அலங்கரிக்கும் நச்சரவங்களே

இறைவனைப் பழித்து, இளைஞர்களை கெடுத்தான் சோக்கரடீஸ்
உண்மையை விட உயர்ந்த தெய்வமும் உண்டோ?
இளைய சமூகமோ விழித்தெழு! ஏன்? எப்படி? எதற்கு?
அனைத்தையும் வினவி, உண்மையை நீயே கண்டறி

உன்னையே, நீ அறிவாய்! உரைத்தது குற்றமா?
விழிப்புணர்வைத் தூண்டி-புதிய சமுதாயம் படைத்திட
முனைந்தது பாவமா? விடியலுக்காய் கூவிய சேவலை
விருந்தாடக் கொல்வது நீதியா? நியாயமா?



மண்டியிட்டுக் கண்ணீர் சிந்தி, உயிர்ப் பிச்சை கேட்டிருந்தால்
என்னுயிர் பிழைத்திருக்கும்- எஞ்சியிருக்கும் வாழ்நாளும்
எரிநரகில் வாடும் இழிநிலையாய் மாறியிருக்கும்.
உங்கள் ஆணவத்திற்கு மண்டியிட நான் கோழையில்லை

உண்மையைத் துறந்து பொய்மையிடம் சோரம்போய்,
உயிர் வாழ்வது விபச்சாரமே-உண்மைக்கு சாட்சியமாய்
நிமிர்ந்த நடையும், நேர் கொண்ட பார்வையுமாய் வாழ்ந்த
சோக்கரடீஸ் மரணத்தை கண்டு அஞ்சுவதா?

பொய்மையிடம் சரணோ, சமரசமோ நான் வேண்டவில்லை
உண்மைக்கு சாவில்லை-உண்மை சாவதுமில்லை-கோழை
போர்களத்தில், உயிர் பிச்சை கேட்டு அழுது பிழைக்கலாம்
வீரனுக்கு அழகு வீரமரணமே! மண்டியிட்டு புலம்பிட
நான் கோழையல்ல, மரணம் என் வாழ்வின் முடிவுமல்ல.

கூடியிருக்கும் கூட்டமே- அநீத நடுவர்களே,
உங்களை குற்றம் சொல்லும் உங்கள் மனச்சாட்சியே
நீங்கள் எனக்கு வழங்கிய தீர்ப்பு அநீதி
என உங்களைப் பழிக்கும்.

நான் மூட்டிய சிந்தனைக் கனலோ அவியாது-
உங்கள் அநீதத் தீர்ப்பை சத்தியம் ஏற்காது,
வாழ்வைச் சுவைத்தவன், சாவையும் சுவைத்தறிய
விஷமே என் மரணத்தின் வழியாகட்டும்



உங்கள் மனச்சாட்சியே விஷமாய் உங்களை
மெல்லக் கொல்ல, இழிந்த சாவே- உங்களுக்கு
சாபமாகட்டும், வீரமரணமே -முதியவனுக்கு
வரமாகட்டும், உண்மை நம்மை தீர்ப்பிடட்டும்

வார்த்தை ஜாலம் புரிந்து-வாதங்களால் வழக்கை வெல்லவது
என் வழியல்ல, சோக்கரடிஸ் உயிர் பிச்சை கேட்பதும் அழகல்ல
***சத்தியத்தின் சாட்சியமாய் என் வாழ்வு***
***உண்மைக்கு கிடைத்த வெகுமதியாய் என் சாவு.***

உண்மையைக் கொன்ற உங்கள் மேல்
உண்மையே பழி தீர்க்கட்டும்
தீயவனுக்கும், கோழைக்குமே மரணபயம்,
வீரனுக்கோ ஏது பயம்?



நல்ல நடுவர்களே-என் பிள்ளைகள், வளரும்போது
பாதை மாறித் தீயவழியில் நடந்தால் -பாசத்
தந்தையாய் கண்டித்து நல்வழிப்படுத்துங்கள்-
இதுவே என் இறுதி வேண்டுகோள்

நான் சாகவும்- நீங்கள் வாழவுமாய் நம் பயணம்
வெற்றி யாருக்கென்று-வாழும் இறைவனுக்கே வெளிச்சம்.
என் மரணம் எனக்கு வரமே-வழங்கிட்ட
அநீதித் தீர்ப்பு உங்களுக்கு தீராத சாபமே

சத்தியத்திற்கு சாவில்லை- சாவது
சத்தியமில்லை, சத்தியமோ நித்தியம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17-08-2023*

# திரு வள்ளுவர்



ஒன்றே குலம், ஒருவனே தேவன்!,-யாதும் ஊரே யாவரும் கேளீர்!
யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகமும்-தமிழன் பெருமை
பறைசாற்றிய உண்மை- சாதி, மத, மொழி, இனம் கடந்த
வாழும் கலையாய் வள்ளுவனார் ஈந்த குறளின் மேன்மை



அறம், பொருள், இன்பம் பாடிய சித்தன்
உண்மையின் பித்தன்-முடி சார்ந்த
மன்னருக்கும் நெறி வகுத்த மாமுனிவன்

நாம, ரூபமற்ற இறைவனைத் தொழுது தொடங்கிய குறள்,
அறம், பொருள், இன்பம் வாழ்வில் நிலைக்க குறள் வழியில்
வாழ்வை யாத்தல் உன்னத வேள்வி, இருமை கடந்த
மோட்சமே வீடு, வாழும்போது இறை கடாட்சமாகும் பேறு

வர்க்க பேதம் சாராத சத்தியத்தின் கீதை
யதார்த்தத்தின் சாட்சியமாய் -வாழ்வை அறமாக்கிட
மாமுனி வள்ளுவரின் பொய்யா மொழிப் பாதை

மானுடம் உய்ய மதம் கடந்த நெறி வகுத்த மாபுருஷன்
மனிதநேயத்தின் கீர்த்தனம், வாழ்வை வாழுங்கலையாக்கிட
வரைவிலக்கணம் வகுத்த ஆனந்தப் பாசுரம்






வறுமை, வளமை கடந்து, ஆளும் வர்கத்திற்கு
துதிபாடும் இழி நிலை துறந்த மாமனிதன், பெற்ற கல்வி,
உற்ற செல்வம், இன்புற்ற மனை வாழ்வு-யான் பெற்ற இன்பம்
பெறுக இவ்வையகம் என்றே அருளிய பொதுமறை

முப்பாலையும் தேன் தமிழில் கலந்து-இப்பார்
உய்யப் பாடிய பொய்யா மொழிப் புலவன்-
வள்ளுவப் பெருந்தகை வாழ்வால் சொன்ன விதி
வாழ்ந்தறியும் உண்மையே தெய்வம் என்ற அனுபூதி

வாழும் கலையின் ஆளுமை, இல்லறத்தை
நல்லறமாக்கி-வாசுகியை ஆட்கொண்ட ஆண்மை-
காதலையும் வேதமாக்கிய மேன்மை
பெருமான் வள்ளுவனுக்கே உரித்தான பெருமை



தெய்வம் பலப் பல சொல்லித் தீயை வளர்ப்பவர்
நட்ட கல்லையும் தெய்வம் என்று சொல்வார்
நாலு புஷ்பம் சாத்தி, சுற்றி வந்து தொழுவார்
நாலு வேதம் உண்மை எனப்- போற்றும் மூடர்

மதம் கடந்த மாமனிதனுக்கு நெற்றியில்
நீறு பூசுவார்- சாதியம் கடந்த தெய்வப் புலவனுக்கு
சாதிய விலங்கு பூட்டுவார் வேதிய அசுடர்

ஒருயிரையும் கொல்லாமல், புலால் உண்ணாமல்
வாழ்பவனை உயிர்கள் வணங்கிப் போற்றும்
ஆயிரம் வேள்விகள் புரிதலை விட ஒருயிரைக்
கொன்று உண்ணாததிருத்தல் நன்று என்ற ஞானி




முடி சாாந்த மன்னரெல்லாம் முடிவில்
பிடி சாம்பலாகிட- தமிழ் மறை தந்த தெய்வப் புலவனோ
வாழும் உலகில் இன்றும் ஒளிரும் சூடாமணி
அன்பும், உண்மையும் என்றும் அமைதியின் வழி



தொழும் வேதமெல்லாம் மதத்தொழுநோயாய்
மானுடத்தை வாட்டிட-மதம் கடந்து
பொது மறை, தமிழ் மறை தந்த
பொய்யா மொழிப் புலவன் வாழ்க வாழ்கவே!

தேவர், நாயனார், தெய்ப்புலவர், செந்நாப்போதர்,
பெருநாவலர், பொய்யில்புலவர், பொய்யாமொழிப் புலவர்,
மாதானுபங்கி, முதற்பாவலர் எனப் போற்றிப் புகழ
1330 குறளால் வாழும் வழி சொன்ன பெருமான்

வாழுங்கலையை விருந்தாக்கி-செல்விருந்தோம்பி
வருவிருந்து பார்த்திருக்கும் யாவருக்குமாம் நல்விருந்து
வள்ளுப் பெருந்தகை அருளிய திருக்குறள்
வாழிய வாழியவே

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-10-10-2023*

# தொலைந்த முத்தாரம் -Harilal Gandhi

---



Harilal Gandhi

Gandhi in 1910

| | |
|---|---|
| Born | Hiralal Mohandas Gandhi (later, Abdullah and then, Harilal Gandhi)<br>23 August 1888<br>Delhi, British India |
| Died | 18 June 1948 (aged 59)<br>Bombay, Bombay State, Dominion of India |
| Other names | Hiralal Gandhi |
| Spouse(s) | Gulab Gandhi,Kasturba Gandhi |
| Children | 5<br>(Rani · Manu · Kantilal · Rasiklal · Shantilal) |
| Parents | Mahatma Gandhi (father)<br>Kasturba Gandhi (mother) |



ஓ பாபுஜி, என் தந்தையே! கொள்கை, இலட்சியம் என்று கதைபேசி
சிட்டுக்குருவி, என் சிறகுகளை முறித்துக் கூண்டில் அடைத்தாய்-
“பாரிஸ்டராகும்” என் இலட்சியம் பகல் கனவாக-என்
வாழ்வைப் பாழுங்கிணற்றில் ஆழப் புதைத்தாய்

மனைவி குடும்பம் இருந்தும் கூடிவாழ முடியவில்லை
குடும்பம் நடத்த ஏழை என்னிடம் பணமில்லை
பரீட்சைகளில் தோற்கும் எனக்கு-ஆதரவாய்த்
தோள் கொடுக்கத் தூணாய், துணையாய் யாருமில்லை

பெற்ற பிள்ளையை மறந்து, மற்றவர் சுமைகளை தன் சுமை
எனச் சுமந்த சுமைதாங்கியோ தென் ஆபிரிக்காவில்,
நாதியற்ற ஏழை நானோ கண்ணீரோடு நடுத்தெருவில்

நாளும் சோகத்தில் புலர்ந்து, கோபத்தில் கழியும் இரவுகள்
வேலையின்றி, படிப்பின்றி வறுமையில் வாடும் என் குழந்தைகள்.
பணத்திற்காய் கையேந்தியபோது இலட்சியம் பேசினீர்கள்
“சொந்த காலகளில் நில்” அறிவுரை கூறினீர்கள்

பாபுஜி நீங்களோ இலட்சிய புருஷர்-பாரிஸ்டர்
ஹரிலால் நானோ படிப்பறிவில்லாத ஏழை
காந்தி புத்திரன் என்ற அடையாளமே சுமையானது
சொந்தக் காலில் நிற்கத் தடையானது.



கடன் வாங்கித் தொடங்கிய வியாபாரம் கவிழ்ந்திட
கடன் பட்ட நெஞ்சமோ பொலிஸ் நிலையத்தில் துன்புற,
ஆறுதல் கூற அருகில் நீங்களில்லை-அடைக்கலம் தர
மதுவை தவிர எனக்கோ வேறு புகலிடமில்லை



வறுமையில் வாடிய குடும்பத்தை வாழ வைக்காத தந்தை
அன்பு மனைவியின் கண்ணீர் துடைக்காத கணவன்
தாய் வீடு சென்ற அன்புத் தாரமும் கடும் சுரத்தால் மடிந்திட
மனமுடைந்த துரதிஷ்டசாலியோ பாவி, கொடும் பாதகன்

ஆணிவேரும், விழுதுமாய் நின்று என்னைத் தாங்கிய அன்புத் துணை
குலாப் என்னை விட்டுப் பிரிய, வேரறுந்த மரமாய் வீழ்ந்தேன்-
கண்ணீர் துடைக்க, கட்டியணைத்து ஆறுதல் சொல்ல யாருமின்றி
மதுவில் அமைதி தேடி, தள்ளாடும் குடிகாரனாய்ச் சீரழிந்தேன்

உம்மைச் சந்தித்த பின்னர் குடி துறந்து நற்குடிமகனாய் மாறி
நாடு கொந்தளிக்க, போராட்டங்கள் சூடு பிடிக்க -கொடியேந்தி
வந்தே மாதரம் கோஷமெழுப்பி சத்திய கிரகியாய் மாறினேன்.

உம் தொண்டனாய் நானும் மாறி உம் பணியைத் தொடர
மகாத்மாவின மகன் என்று மகுடம் சூட்டி- பொய்யாய்
வியாபார நிறுவனம் தொடங்கிய கொள்ளையர் கூட்டம்
தந்திரமாய் என்னை வீழ்த்திட நயவஞ்சகம் ஆடிய நாடகம்



முதலீடு செய்தவர்கள் பணத்தை முதலைகள் ஏப்பமிட்டு மறைந்திட
மூடன் நானோ மாட்டிக்கொண்டேன், சிறை சென்றேன்
அறியாமைக்குக் கிடைத்த தண்டனையைவிட''என்னை அறியேன்,
மகன் தந்தை உறவைத் துறந்தேன்''பத்திரிகையில் நீங்கள்
விட்ட சேதி, இடி தாங்கியில்லாத எனக்கோ பேரிடி

துயரை மறக்க மதுவிலே தஞ்சம்-விலைமாதர்
மஞ்சத்திலே நெஞ்சம், நாயினும் கேவலமான
வாழ்வு-நடத்தெருவிலே என் கூடு

கடன்காரருக்கு அஞ்சி கள்வனாய் மறைந்து வாழ
கடனைத் தள்ளுபடி செய்ய இஸ்லாமைத் தழுவிடும் நிர்ப்பந்தம்,
உத்தம இஸ்லாமியனாய் வாழ்வது பேரானந்தம்
சத்தியமே தெய்வம் மகாத்மா உங்கள் சித்தாந்தம்




ஹரிலால் காந்தி -அப்துல்லாவாய் மதம் மாறினான்
நாமம் மாறியதேயன்றி, நாறும் வாழ்வு மாறவில்லை, குடியும்
கூத்துமாய் வாழ்வைச் சீரழித்து உங்கள் நாமத்தை நாறடித்தான்

இழிந்த என் வாழ்வு உயர்ந்த அன்னை மனதை நோகடிக்க,
என்னைத் தேடி வந்து அழுத அன்னை,-அப்துல்லாவை
தயானந்த சரஸ்வதி, ஆரிய சமாஜத்தால் மீட்டெடுத்து
ஹரிலால் காந்தியாய் வாழ, புதுவாழ்வளித்த தேவ கங்கை

குடியால் மானத்தை இழந்தேன், ஆத்மாவை விற்று
மதம் மாறி, என்னை இழந்து, அன்னையைப் புண்படுத்தி,
உங்களை அவமதித்த பரதேசி நான் பாபுஜி

முதுமையில் நீங்கள் தள்ளாட, மது போதையில் நான் தள்ளாட
என்னைத் திருத்த முயன்று தோற்ற மாதா நாளும் அழுதார்
மொழி தோற்கும் போதெல்லாம், அன்னையின் கண்ணீர் பேசும்
துயரம், தோல்விகள் வீழ்த்தும்போதெல்லாம் மாறாத
தொடர் கதையாய், ஹரிலாலிடம் மதுவாடை வீசும்.



Religious conversions

In May 1936, at the age of 48, Harilal publicly converted to Islam and named himself Abdullah Gandhi.[7] However, later in 1936, on his mother Kasturba Gandhi's request, he converted back to Hinduism through the Arya Samaj and reverted to his original name, Harilal.[8]

குடிக்க நினைத்து குடிக்கவில்லை
மறக்க நினைத்தும் குடியைத் துறக்க முடியவில்லை
வாழ முயன்று வழுக்கி விழும்போதெல்லாம்
தூக்கி விட யாருமில்லை

துயர் துடைத்து தலைசாய்க, தாய் மடி இல்லை
தேவதை என் தாரத்தின் பூ மடியுமில்லை
ஆதாரமில்லாத பூங்கொடி, சூறாவளியில் அல்லாடி
மதுவில் அமைதி காணும் அவல நிலை

இரயில் நிலையத்தில் “மகாத்மாவுக்கு ஜே“ கோஷம்
விண்ணைத் தொட, -நானோ, “மாதா கஸ்தூரிபாய்கு ஜே“
குரல் கொடுத்து, தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கி
தாய்க்கென இரந்து பெற்ற கனியைக் கொடுத்து மகிழ்ந்த ஏழை




மகாத்மா உங்கள் இதயத்திலோ பாரத மாதா,
குடிகாரன் ஹரிலால் இதயத்திலோ
என்னைப் பெற்ற தெய்வம் கஸ்தூரி மாதா



தந்தை அழைப்பை நிராகரித்தே-தொடர்ந்தும்
குடியும், கூத்துமாய் சீரழிந்த ஊதாரி
தேசப்பிரச்சினையிலும் தீர்க்கமுடியாத உன் பிரச்சினை
மனம் நொந்து மடல் எழுதிய சுதந்திரப் போராளி

என் தாயால், உம் தர்மபத்தினியால்-தந்தையே
நீங்கள் மகாத்மா ஆனீர்கள், நான் சொன்னதை-
மறுப்பின்றி மகிழ்ந்து ஏற்றீர்கள், பெருந்தன்மையான
மாமனிதர் நீங்கள், சீரழிந்த குடிகாரன் நான்




வெள்ளையர் அரசு சாத்தானின் அரசு
இறைவன் இதற்குத் துணையில்லை
வெள்ளையனே வெளியேறு-செய் அல்லது செத்துமடி
தாய் நாட்டை உலுப்பிய தாரக மந்திரம்



The Mahatma's eldest son Harilal rebelled against his father, cutting off all ties in 1911 when his father refused to let him study law in the UK (as Gandhi himself had done). He converted to Islam to annoy his father, embezzled money and drank himself to death. Accounts of his arrests embarrassed the nation.

வன்முறை தலை விரித்தாட, ஆகான் மாளிகையில்
அன்னையும் நீங்களும் சிறையிருக்க, தடைதாண்டி வந்து
தாய்மடி வீழ்ந்தழுத குடிகாரன்

குடிபோதையில் என்னைக் கண்ட அன்னையோ
கண்ணீரோடு கடிந்து துரத்தினார்
என் மகன் துஷ்டன் அல்ல துர்ப்பாக்கியசாலி என்றே
கண்ணீர் சிந்தி தாய் கஸ்தூரி புலம்பினார்





இந்து வெறியர் உம்மை “***எட்டப்பன்***” ***எ***னத் தூற்ற-
இஸ்லாம் வெறியர் உம் மரணத்திற்காய் “துவா செய்ய”
உம் மனத்துயர் அறியாத பேதை நான்

தாயும் மரிக்க தனியனானேன், மதுப்பிரியனானேன்-
தாயும்-தாரமும் இழந்த வெறுமை -வாழ்வை அழிக்க,
கசரோகம் என்னை அரிக்க நோயாளியானேன்

நள்ளிரவில் சுதந்திரம் மலர, மூவர்ணகொடி
எழுந்து விண்ணில் பறக்க, விடியாத இருளில்
தெருவில் விழுந்து கிடந்த பிச்சைக்காரன்
குடிகார ஹரிலால், மகாத்மாவின் தலைமகன்

காந்தியை சுட்டுக் கொன்றார், மகாத்மா இறந்து விட்டார்
சேதியாக, பாரதம் அழப், பாவி நான் கல்லாய் நின்றேன்
எனக்குள் கரைந்தழுது, என் தந்தையே பாபுஜி,
உம்மைத் தொழுது நின்றேன்

“ நாடு” பெற்றவர் மகிழ, நாளும் கொண்டாட்டம் நிகழ
நாதியற்ற அநாதை தெருவோரத்தில்-மறுநாள்
நோயாளியாய் நகரசபை வைத்திய சாலையில்

உயிர் பிரியும் நிலையில் தந்தை பெயர் கேட்டார்
“பாரிஸ்டர் மோகன்லால் கரம்சாந் காந்தி”
கூறுமுன் என் ஆவி போனது, என் கிழிந்து நைந்த
அழுக்கு ஆடைக்குள், தாயும் நீங்களும், தாரமாய்
வாழ்வு தந்த தேவதை குலாப்பும் நிற்கும் புகைப்படம்
பார்த்தவருக்கு புரியாத பாடமானது



சுதந்திரத்திற்காய் சுழன்ற இராட்டினம்
சடுதியாய் நின்றுபோனது - ஹரிலால்
என்ற நூலும் பட்டென்று அறுந்துபோனது

வெள்ளையர் காத்து மதித்த மகாத்மாவை, சுதந்திர இந்தியாவில்-
இந்து மதவெறியர் சுட்டுக் கொன்று தம் மதவெறி தணித்தார்?
இந்து, முஸ்லீம் கலவரம் வெடிக்க, பாரத புத்திரர் தம் குருதியை
சிந்துவிலும், கங்கையிலும் சிந்திக் கலந்து நாறி மணந்தார்

நிறவெறிக்கும்-வெள்ளையர் அடக்குமுறைக்கும்
தலை வணங்காத சத்தியனை, மத, வெறிதான் சாய்க்குமோ?
சத்தியம்தான் தோற்குமோ? காலமே சொல்

உடலோ மண்ணில் விழ -உத்தமர்
மகாத்மாவோ விண்ணில் எழக்-கண்ணீரில்
கரையும்  மானுடநெஞ்சங்கள்

சத்தியம் அழிவதில்லை,
சத்தியபுருஷருக்கு சாவுமில்லை
ஹே ராம்

*ரகுபதி ராகவ ராஜாராம்*
*பதித பாவன சீதாராம்*
*ஈஸ்வர அல்லா தேரே நாம்*
*சப்கோ சன்மதி தே பகவான்*

*Sitha and Rama, Sitha and Rama*
*O beloved, praise Sita and Rama,*
*Ishwar or Allah is your name,*
*May God bless all with true wisdom*

சாதி, மதம் தாண்டிய சத்திய சோதனை
சதியால் சாய்ந்திட, நல் மனங்களில் தீராத வேதனை
சாதி, மதமோ இன்றும் தீய்க்கும் நரகவேதனை
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம் மாறாத நிபந்தனை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-10-2023

The three handwritten missives show that Gandhi told his drunken eldest son he would rather the young man died than resort to alcohol.

And he even accuses Harilal of raping his own daughter Manu when she was eight.

Their turbulent relationship was the subject of the film Gandhi, My Father in 2007, but the notes, dating from 1935 highlight how bad it was.

In one he says of Harilal, the eldest of Gandhi's four children with wife Kasturba: "Manu is telling me dangerous things about you. She says **you raped her** before eight years. I can never believe she would lie."

Written in Gandhi's native Gujarati the first note also asks if Harilal is suffering from syphilis, and asks: "Please tell me if you are still interested in alcohol and debauchery?"

Harilal must have replied that he was drinking to treat malaria as in the second letter Gandhi replies: "I have never heard the use of brandy in malaria.

"I would wish that you better die than **resort to alcohol** in any manner."

In the third letter he writes: "You should know that your problem has become much more difficult for me even than our national freedom."

# வெள்ளையனும் கறுப்பு வேதமும்

---

மனிதனோ இறை சாயல், மனித மாண்பை இழிவு செய்தல்
பாவம், மனிதரில் உயர்வு தாழ்வு இல்லை
தீண்டாதான், அடிமை , உரிமை குடிமகன் என்பது
ஆணவத்தின் கொடுமை-மதவாதத்தின் சிறுமை





ஆபிரிக்காக் கண்டத்தில் ஒலிக்கும் அவலக்குரல்கள்
வான் கதவை தட்டிட, கறுப்பு சுதேசிகளை விலங்குகளாய்
வேட்டையாடிய வெள்ளைப் பேய்கள்-கிறிஸ்தவர்களோ?

ஆபிரிக்க சுதேசிகளை அசையும் சொத்துக்களாய் விற்று
கோடிகளை குவித்த ஆங்கிலேய, டச்சு, பிரெஞ்ச் வியாபாரிகள்
அமெரிக்க, ஐரோப்பிய பொருளதாதரத்தின் ஆணிவேராய்
அடிமை வியாபாரம் மாறிட-கறுப்பு
கிறிஸ்துவை விற்றுப் பிழைத்த புதிய யூதாஸ்கள்

குருதி, வியர்வை, மல சலம் கலந்த துர்வாடை வயிற்றைக் குமட்டி
வாந்தியை வரவழைக்க அடிமைக் கப்பல்களின் துர்நாற்றம்
அமெரிக்க மண்ணின் மூச்சைத் திணறடிக்க நாறி மணந்த
அடிமைகள்-எரிநரகத்தை மிஞ்சிய வெள்ளையர் கொடுமைகள்



இரும்புச் சங்கிலி, கை கால் விலங்கு,
கசையடி, இரும்பு முகமூடி-தூக்கு தண்டனை
விரட்டிப் பிடித்து குதறிக் கிழித்திட வேட்டை நாய்கள்

அன்னாஸ், கைபாஸாய், பவுலாய்ப் பாதிரிகள் வேதம் ஓதிட
அராஜகத்தின் வடிவமாய்-பாரோவின் அரியணையில்-
வெள்ளைக் கிறிஸ்தவ வியாபாரிகள் அமர்ந்திட
துன்புறும் கிறிஸ்துவாய் மாறிய கறுப்பர்களோ அடிமைகள்

கொத்தடிமைகளாய் விற்கப்பட்ட ஆண், பெண்,
சிறுவர் சிறுமியர்கரும்பு, பருத்தி, கோதுமைத் தோட்டங்களில்
வாழ்நாள் அடிமைகள், வியர்வை, குருதி, கண்ணீர்
சிந்தி உழைத்து மண்ணுக்கு உரமான தொழிலாளிகள்

வயது வேறின்றித் கறுப்புத் தாய்குலமோ
வெள்ளையன் காமப்பசிக்கு விருந்து
விளையாடிக் கழித்து விதைத்த விந்தோ
புதிய கலப்பின அடிமைச் சந்ததிக்கு வித்து

"இதோ மனிதன்"
வெள்ளைப் பிலாத்து வேடிக்கையாய் விளித்திட
கொத்தடிமையாய் உழைத்து தேய்ந்து
துன்புறும் இயேசுவாய் கறுப்பு அடிமை



அடிமைப் பொருளாதாரம் வளர்த்திட-அடிமைகளும்
விலங்குகளாய் இனவிருத்தி செய்ய நிர்பந்திக்கப்பட,
வெள்ளைக் காமுகர்களின் வெறியாட்டங்கள்
களியாட்டமாய் மாறிய பாலியல் வல்லுறவுகள்

அடிமைகளே, நீங்கள் கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிவதுபோல
இவ்வுலகில் உங்கள் தலைவர்களாய் இருப்பவர்களுக்கு
***அச்சத்தோடும், நடுக்கத்தோடும், முழுமனத்தோடும்***
கீழ்ப்படியுங்கள்-(எபேசியர் 6-5)
விவிலியத்திலும் சாத்தானின் வசனங்கள்
அடிமை வாழ்வோ எரி நரகமான கொடுமையானது



சுதேசித் தெய்வங்களை வழிபட்டபோது-கறுப்பர்களோ
நாடான்ற சுதந்திர புருஷர்கள், வல்ல யாவேயை வழிபட
மதம் மாறியபோதோ ஆயுட்கால அடிமைகள்

வெள்ளை கிறிஸ்தவ அடக்குமுறை-பாரோவிலும் பன்மடங்கு
கொடியதாய் மாறிட கறுப்பு அடிமைகளின் கூக்குரல்
வானை எட்டியும் வாளாவிருந்த வல்ல யாவே நிறவெறியனோ?-
இல்லை யூதரை மட்டும் தேர்ந்த மதவெறியனோ?

நிறவெறி ஆள-அன்பு மதமோ திசை மாறிப் போக
வெள்ளைப் பாதிரிகள் கழுத்தில் தங்கச் சிலுவைகள்-
கசையடி பட்ட அடிமைகள் சுமந்திட இரும்புச் சிலுவைகள்-



மூன்று நூற்றாண்டுகளாய்த் தொடர்ந்த சிலுவைப்பாதை
காமபோக வெள்ளையனுக்கு பொருளாதார மீட்பானது-
கறுப்பு அடிமைகளுக்கு நாமே நமக்கு மீட்பர் எனும்
உண்மையைத் தெளிவாக்கியது.

மதப்போதை மறைய- நிறவெறி ஒழிய
அடிமைகளின் உரிமைப் போராட்டம் வெடித்தது
நாமே கிறிஸ்து -நமக்கு நாமே மீட்பர் நிதரிசனமானது

கானானியர் நிலம் பறித்த ஆபிரகாமின் தேவன்
எகிப்தியரை வதைத்த வல்ல யாவே-கடவுள்?
அன்பே தெய்வம் அடிமைகளின் வேதம்
வல்லமையே இறைவன் யாவேயின் நாதம்



நம் பாவங்களுக்காய்-இயேசு பலியானார்
கொலையை இரட்சணிய இறையிலாய் திரித்த பொய்மை
உண்மையே உனக்கு விடுதலையளிக்கும்
இயேசுவின் மாறாத போதனையோ வாழும் உண்மை

வல்ல இறைவனை வழிபட்ட யூதர்கள்-அன்பே இறைவன்
என்ற-இயேசுவைக் கொன்ற மதவாதிகள்-அன்பு
இறைவனோ வாழ்ந்தறியும் உண்மை
பலி, வழிபாடோ திசை மாறிய நம்பிக்கை



கல் மனம் கனிந்தால் மனிதம் மலரும், மனம் திரும்பி
இறைவனிடம் சரணடையும், ஆணவம் மறைய
சத்திய தரிசனம் நிதரிசனமாகும்
ஆண்டான். அடிமை பேதம் மறையும்

மனம் திரும்பங்கள்-இன்றும் இயேசு விடுக்கும் அழைப்பு
அன்பே தெய்வம், உண்மையோ தெய்வீகம்
விழிப்புணர்வோ தீபம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-10-10-2023*

The arrival at Point Comfort marked a new chapter in the history of the trans-Atlantic slave trade, which began in the early 1500s and continued into the mid-1800s. The trade uprooted roughly 12 million Africans, depositing roughly 5 million in Brazil and over 3 million in the Caribbean. Though the number of Africans brought to mainland North America was relatively small—roughly 400,000—their labor and that of their descendants was crucial to the economies of the British colonies and, later, the United States.

